بسم الله الرحمن الرحيم

# أخطار تهدد البيوت

# இல்லங்களை அச்சுறுத்தும் அபாயங்கள்

## DANGERS THAT THREATEN THE HOME


ஆசிரியர்:

அஷ்ஷைக் முஹம்மது ஸாலிஹ் அல்முனஜ்ஜித்

தமிழில்:

உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்



إن هدى الله هو الهدى

دار الهدى

DARUL HUDA

(இஸ்லாமாகிய) அல்லாஹ்வின் நேர்வழியே உண்மையான நேர்வழி

**Hadiyah Rs. 40/-**

Name of The Book:
**Illangalai Achuruthum Abaayangal**

Author:
**Asshaikh Muhammad Saalih Almunajjid**

Translator:
**Mufti A. Omar Sheriff Qasimi**

Proofreaders:
**Group of Islamic Scholars**

Copies: 3000, Edition: 6th, April 2019, Pages: 96
Printed by: Patel Graphics, Chennai - 6.

Published by:

DARUL HUDA
Quality Islamic Book Publishers

# 211(102), Linghi Street, Mannady, Chennai - 600 001.
Phone: +91 2524 7866 Cell: +91 98401 74121
darulhuda.chennai@gmail.com,
www.darulhuda.net

# பொருளடக்கம்

# பதிப்புரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய
அல்லாஹ்வின் பெயரால்...

எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே! ஸலவாத்தும் ஸலாமும் அல்லாஹ்வின் தூதர் முஹம்மது ﷺ அவர்கள் மீதும், அவர்களுடைய குடும்பத்தார், மனைவிமார்கள், தோழர்கள் மற்றும் அவர்களை மனத்தூய்மையுடன் பின்பற்றுகின்ற அனைவர் மீதும் உண்டாகட்டும்.

இந்நூலின் மூலமும் "தாருல் ஹுதா"வின் மற்ற நூல்கள் மூலமும் தாங்களும் பயன்பெற்று மக்கள் அனைவரையும் பயன் பெறும்படி செய்யுங்கள்.

நன்மையில் பங்கு பெறும் அனைவருக்கும் அல்லாஹ் நன்மை செய்வானாக!

இந்நூலில் குறைகள் ஏதேனும் உங்கள் பார்வைக்குத் தெரியுமாயின் அவசியம் எங்களுக்கு அவற்றைச் சுட்டிக் காட்டி பணி சிறப்பதில் உதவுங்கள். அல்லாஹ் உங்களுக்கு நற்கூலி வழங்கட்டும்!

அல்லாஹ்வே, எங்களிடமிருந்து ஏற்றுக் கொள்! எங்களை மன்னித்தருள். உனக்கே எல்லாப் புகழும்!

**உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ்ஸலாம்,**
(அல்குர்ஆன் மற்றும் நபிமொழிப் பணியாளன்,)
தாருல் ஹுதா, சென்னை-1.

# தாருல் ஹுதா

## ஓர் அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது (ஸல்) அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்!

இஸ்லாமிய சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும்
வரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு

தாருல் ஹுதாவை அறிமுகம் செய்வதன் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் வைக்கிறோம்.

அல்லாஹு தஆலா கூறுகிறான்:

***"நம்பிக்கை கொண்ட ஆண்களும், நம்பிக்கை கொண்ட பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாவர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, ஸகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகையவர்களுக்கு அதிசீக்கிரத்தில் அல்லாஹ் அருள்புரிவான். நிச்சயமாக,***

*அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்.” (அத்தவ்பா 9 : 71)*

***(நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் (மனிதர்களை) சிறந்ததின் பக்கம் அழைத்து நன்மையைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களிலிருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றி பெற்றவர்கள்.***

*(ஆலுஇம்ரான் 3 : 104)*

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதைத் தமது கரத்தால் மாற்றட்டும். அது இயலாவிட்டால் தமது நாவால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் (நம்பிக்கையின்) குறைந்தபட்ச அளவாகும். (ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் கூறினார்கள்: நம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசம் கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல. உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. (ஸஹீஹுல் புகாரி)

இன்று நமது சமுதாயத்தில் சிறியோர் முதல் பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறை யான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவையுள்ளவர்களாக இருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, மேற்கூறப்பட்ட

இறை வசனங்கள் மற்றும் நபிமொழிகளுக்கிணங்க சமுதாயச் சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து, அல்குர்ஆன் மற்றும் நபிவழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறை திருப்தியை அடையவேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப் பட்டதுதான் **தாருல் ஹுதா.**

## தாருல் ஹுதாவின் பணிகளும் தொண்டுகளும்

### *அழைத்தல்:*

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத்தூதர்கள் வாயிலாக நிலைநிறுத்தப்பட்டது. இறுதி இறைத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுக்குப் பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும், சிறப்புமிகு நபிமொழியும் இதன் அவசியத்தை வலியுறுத்துகின்றன. எனவே, இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும் அதன் உயர்வுகளை விளக்கிச் சொல்லி அதன் பக்கம் அழைப்பதும் **தாருல் ஹுதா**வின் முதல் பணியாகும்.

### *கற்பித்தல்:*

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள், வாலிபர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழிகளை

அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத் தருவது **தாருல் ஹுதா**வின் இரண்டாவது பணியாகும்.

### *நூல் வெளியிடுதல்:*

மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழி இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களைத் தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து, அந்நூல்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது **தாருல் ஹுதா**வின் மூன்றாவது பணியாகும்.

### *உதவுதல்:*

அல்லாஹு தஆலாவே அனைவரின் தேவைகள், துன்பங்கள் அனைத்தையும் நிவர்த்தி செய்பவன். மிகப் பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை, எளியோர், நலிந்தோர் ஆகியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கெடுப்பது, பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்றவரை உதவுவது முஸ்லிம்களுடைய அடிப்படைப் பண்புகளாகும்.

இந்த உன்னத பணிக்காக **பைத்துல்மால்** (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்கச் சிந்தையையும், மார்க்கப்பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான, உபரியான தர்மங்களைப் பெற்று அவற்றை தேவையுடையவர்களுக்கு வழங்குதல் **தாருல் ஹுதா**வின் நான்காவது பணியாகும்.

இந்தப் பணிகள் மட்டுமின்றி, இஸ்லாம் முழுமையாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காகவும், மனித சமுதாயங்களுக்குள் நல்லுறவும், அன்பும், கருணையும், சமூகப் புரிந்துணர்வும் ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காகத் தொண்டாற்ற வேண்டும் என்பது **தாருல் ஹுதா**வின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும், தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன், தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்குபெறுமாறும் அழைக்கிறோம்.

***“நீங்கள் உங்கள் ஆன்மாக்களுக்காக நன்மையில் எதை முற்படுத்திக் கொள்கிறீர்களோ, அதைத்தான் அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்ததாகவும், மகத்தான கூலியாகவும் பெற்றுக் கொள்வீர்கள்.”***

***(அல்முஸ்ஸம்மில் 73 : 20)***

அவனிடமே உதவி தேடுகிறோம்! அவனையே முன்னோக்கி நிற்கிறோம்!

-----------

# நூல் அறிமுகம்

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய
அல்லாஹ்வின் பெயரால்...

எல்லாப் புகழும் நன்றியும் அல்லாஹ்வுக்கே உண்டாகட்டும். அவன் ஒருவனையே புகழ்கிறோம். அவனிடமே உதவி தேடுகிறோம். அவனிடமே பாவமன்னிப்புக் கோருகிறோம். நமது மன இச்சைகளின் தீமைகள் மற்றும் கெட்ட செயல்களை விட்டு அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறோம். எவரை அல்லாஹ் நேர்வழிபடுத்தினானோ அவரை யாரும் வழிகெடுக்க முடியாது. அல்லாஹ் எவரை வழிகெடுத்தானோ அவரை எவரும் நேர்வழிபடுத்த முடியாது.

அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு எவருமில்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை என்று சாட்சி கூறுகிறேன். முஹம்மது ﷺ அவர்கள் அல்லாஹ்வின் அடிமையாகவும் தூதராகவும் இருக்கிறார்கள் என்றும் சாட்சி கூறுகிறேன். அல்லாஹ்வின் அருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது ﷺ அவர்கள் மீதும் அவர்களுடைய குடும்பத்தார், தோழர்கள் மற்றும் அவர்களை மனத்தூய்மையுடன் பின்தொடர்ந்த அனைவர் மீதும் உலக இறுதிநாள் வரை உண்டாகட்டும்!

இல்லங்களைச் சீர்திருத்துவது ஒரு பெரிய பொறுப்பும், அவசியமான பணியுமாகும். அல்லாஹ்விற்குக் கட்டுப்பட்ட ஒவ்வொரு முஸ்லிமான ஆணும் பெண்ணும் அந்தப் பொறுப்பை அல்லாஹ் ஏவியவாறு நிறைவேற்றுவது கடமையாகும். அந்த பொறுப்பை அல்லாஹ்வுடைய வழிமுறையை பின்பற்றி நிறைவேற்றுவது அவசியமாகும். அல்லாஹ் தடுத்த தீய காரியங்களை விட்டும், அவன் விரும்பாத செயல்களை விட்டும் இல்லங்களைத் தூய்மையாக்குவது இல்லங்களைச் சீர் செய்வதற்குரிய சாதனங்களில் முக்கியமான ஒன்றாகும்.

இதோ... உங்கள் பார்வைக்கு வந்துள்ள இந்த சிறு நூலில், அத்தகைய தீய காரியங்களில் சிலவற்றைப் பற்றி விவரிக்கப்பட்டுள்ளன. பொதுவாக இன்று வீடுகளில் காணப்படக்கூடிய தீமைகள் மற்றும் தடுக்கப்பட்ட செயல்கள் இந்நூலில் விளக்கமாக கூறப்பட்டுள்ளன.

சில இல்லங்களில் காணப்படுகின்ற பெரிய தீமைகளைப் பற்றி இங்கே எச்சரிக்கப்படுகின்றன. அந்தத் தீமைகள் சமுதாயத்தின் வளரும் தலைமுறையினரை அழிக்கக்கூடியதாகவும் இல்லங்களின் பாதுகாப்பை நாசப்படுத்தக்கூடியதாகவும் இருக்கின்றன.

எவர்கள் நேர்வழியை நாடுகிறார்களோ அவர்களுக்காகவும், எவர்கள் பாவங்களையும் குற்றங்களையும் அனாசாரங்களையும் விட்டு விலக நாடுகிறார்களோ அவர்களுக்காகவும் இந்த நூல் வெளியிடப்படுகிறது.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறுகிறார்கள்:

உங்களில் ஒருவர் ஒரு தீமையைக் கண்டால் அவர் அதைத் தமது கையால் மாற்றட்டும்; முடியாவிட்டால் தமது நாவால் (சொல்லி) மாற்றட்டும். அதுவும் முடியாவிட்டால் தமது உள்ளத்தால் (அதை வெறுத்து ஒதுக்கட்டும்). இது இறைநம்பிக்கையின் பலவீனமா(ன நிலையா)கும்.

(ஸஹீஹ் முஸ்லிம் -78)

இல்லங்களை சீர்திருத்த நாற்பது உபதேசங்கள் என்ற எனது நூலில் தீமைகள் என்ற தலைப்பில் கூறப்பட்ட விசயங்களுடைய விளக்கம்தான் இங்கு முன்வைக்கப்படக்கூடிய உபதேசங்கள்.

மகத்தான அர்ஷின் அதிபதியான அல்லாஹ்விடம் வேண்டுகிறேன்: எனது இந்த இரு நூல்களின் மூலமும் எனக்கும் என் முஸ்லிமான சகோதர சகோதரிகளுக்கும் அவன் நற்பலன் அளிப்பானாக! அவனே நேர்வழி காட்டக்கூடியவன்.

# பெண்களை தனிமையில் சந்தித்தல்!

ஒரு பெண்ணை அவளுடைய கணவன் இல்லாதபோது 'மஹ்ரம்'[1] அல்லாத உறவினர்கள் சந்திக்கச் செல்வது பற்றிய எச்சரிக்கை!

பொதுவாகவே ஒரு பெண்ணுக்கு அவள் புகுந்த வீட்டில் அவளுடைய கணவனின் உறவினர்களும் இருப்பார்கள். அந்த உறவினர்களில் அவளுக்கு மஹ்ரம் அல்லாதவரும் இருப்பார். சில சமூக குடும்பச் சூழ்நிலைகளால் அனைவரும் ஒரே வீட்டில் வசிக்கக்கூடிய சூழ்நிலை இருக்கும்.

உதாரணமாக, கணவரைவிட வயது குறைந்தவர்களான அவருடைய தம்பிகள், தங்களது படிப்பையோ வேலையையோ தொடர்ந்து கொண்டிருப்பார்கள். அன்றாடம் வீட்டுக்குள் இவர்கள் வருவதும் போவதும் வழமையாக இருக்கும். வீட்டினரின் உறவுக்காரர்கள் என்பதால் ஊர் மக்களோ, தெரு மக்களோ அதனைக் கண்டுகொள்ள மாட்டார்கள்; கணவரின் சகோதரனோ, சகோதரனின் மகனோ, கணவரின் தந்தையுடைய சகோதரர்களோ, தாய்மாமன்களோ அல்லது அவர்களின் மகன்களோ

---

1. மஹ்ரம் - பெண்ணுக்குத் திருமணம் முடிப்பது நிரந்தரமாகத் தடை செய்யப்பட்டவர்கள். உ.ம்: தந்தை, சகோதரன், தந்தையின் சகோதரர்கள், தாயின் சகோதரர்கள்.

அங்கு எந்தவிதக் கட்டுப்பாடுகளுமின்றி வந்து போய்க் கொண்டிருப்பார்கள். இவ்வாறு சுலபமாக வந்து போவது சில நேரங்களில் மிகப்பெரிய சீர்கேடுகளை உண்டாக்கி விடுகின்றது. அவை அல்லாஹ்வின் கோபத்திற்கு காரணமாகி விடுகின்றன.

எனவே, இவ்வாறான சந்தர்ப்பங்களை நாம் மார்க்க சட்டங்களைக் கொண்டு முறைப்படுத்துவது அவசியமாகும்.

இது விஷயமாக அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறிய வார்த்தையை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

“அன்னியப் பெண்களிடம் செல்வதைக் குறித்து நான் உங்களை எச்சரிக்கிறேன்” என்றார்கள். அப்போது அன்ஸாரித் தோழர் ஒருவர், “அல்லாஹ்வின் தூதரே! ‘அல்-ஹம்வு’ கணவனின் உறவினர்கள் பற்றி என்ன சொல்கிறீர்கள்?” என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், “கணவனின் உறவினர்கள் மவ்த் - மரணம்!” என்று பதிலளித்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இந்த நபிமொழியைப் பற்றி இமாம் நவவி ؒ அவர்கள் கூறுகிறார்கள்: இதன் வாசகத்திலுள்ள ‘அல்-ஹம்வு’ என்ற வார்த்தை கணவனின் தந்தை, பாட்டனார், பிள்ளைகள், பேரன்கள் தவிர்த்து கணவனின் மற்ற உறவினர்கள் அனைவரையும் குறிப்பிடுகிறது.

ஏனெனில், இவர்கள் அனைவரும் மனைவிக்கு ‘மஹ்ரம்’ ஆகிவிடுவார்கள். எனவே, அவர்கள் அந்தப் பெண்ணிடம்

பேசுவதும், அவள் இருக்கக்கூடிய இடத்திற்கு தனிமையில் செல்வதும் ஆகுமானதே! இவர்களைப் பற்றி இந்த நபிமொழியில் சொல்லப்படவில்லை.

கணவனின் சகோதரர்கள், அந்த சகோதரர்களின் மகன்கள், கணவனுடைய தந்தையின் சகோதரர்கள், அந்த சகோதரர்களின் மகன்கள், கணவனின் தந்தையுடைய சகோதரிகளின் மகன்கள் ஆகிய அனைவரையும் 'அல்ஹம்வு' என்ற வார்த்தை குறிப்பிடுகிறது.

அதாவது, அந்தப் பெண்ணின் கணவன் இறந்து விட்டால் அல்லது அவளை விவாகரத்து செய்துவிட்டால், இவர்களில் எவரையும் மணமுடித்துக் கொள்வது அவளுக்கு ஆகுமானதாகும். இவர்கள் அப்பெண்ணைத் தனிமையில் சந்திப்பதைப் பற்றியே இந்நபிமொழி கண்டிக்கின்றது. இன்று தனது சகோதரனின் மனைவி இருக்கும் வீட்டிற்குத் தனிமையில் சென்று வருவது பல ஆண்களின் வழக்கமாக உள்ளது. நபி ﷺ அவர்களின் தடையை இவர்கள் அலட்சியம் செய்கின்றனர். இதைத்தான் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் 'மரணம்' என்று எச்சரித்துள்ளார்கள். தடுக்கப்பட வேண்டியவர்களில் அன்னியர்களைவிட இவர்களே முதலிடம் வகிக்கிறார்கள். (ஃபத்ஹுல் பாரி)

**அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், 'அல்ஹம்வு அல் மவ்த்து' - 'கணவனின் உறவினர்கள் மரணம்' என்று கூறியதற்குப் பல கருத்துகள் இருக்கின்றன.**

**1.** கணவனின் உறவுக்கார ஆண்களுடன் ஒரு பெண்

தனித்திருக்கும்போது பெரிய குற்றங்களும் பாவங்களும் நிகழ்ந்து விட்டால் அவர்களின் மார்க்கம் நாசமாகிவிடும்.

**2.** அந்த இருவரும் தனிமையில் சந்திப்பதால், பாவங்கள் நிகழ்ந்து அவை அவர்களின் மரணத்திற்குக் காரணமாகவும் ஆகிவிடலாம். அதாவது, ஒரு பெண் மணமுடிக்கப்பட்ட நிலையில் தகாத காரியத்தைச் செய்துவிட்டால் அவளைக் கல்லெறிந்து கொல்வதும், அவளுடன் அந்தக் காரியத்தைச் செய்தவனும் மண முடித்தவனாக இருந்தால் அவனையும் கல்லெறிந்து கொல்வதும் (இஸ்லாமிய அரசுக்குக்) கடமையாகி விடுகிறது.

**3.** அந்தப் பெண்ணைத் தனிமையில் சந்திப்பது, அவளுடைய கணவனுக்குக் கோபத்தை உண்டாக்கி, அவனால் விவாகரத்துச் செய்யப்படுகிற நிலைக்கும் அவள் ஆளாகலாம். அதனால் அவளுக்கு நாசம் உண்டாகலாம்.

**4.** எப்படி நீங்கள் மரணத்திற்கு பயப்படுகிறீர்களோ, அதுபோல அவளைத் தனிமையில் சந்திப்பதற்குப் பயப்படுங்கள் என்ற கருத்துப்படவும் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறியிருக்கலாம்.

**5.** மரணம் எப்படி வெறுக்கப்பட்டதோ, அதுபோலவே அவளைத் தனிமையில் சந்திப்பதும் வெறுக்கப்பட்டது.

**6.** கணவனின் உறவினர்கள், அவளுடன் தனித்திருக்க வேண்டாம். அதனைவிட மரணமே மேல்.

இவ்வாறெல்லாம் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கட்டளையிட்டு, இதையும் ஒரு மார்க்கமாக ஆக்கி இருப்பதன் நோக்கம், இல்லங்களைப் பாதுகாக்க வேண்டும்; இல்லங்களைச் சீரழிக்கக்கூடிய எந்தக் காரியங்களும் இல்லங்களில் நுழைந்துவிடக் கூடாது என்பதே!

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் இக்கட்டளைக்குப் பிறகும் ஒரு கணவன் தனது மனைவியிடம், "நான் இல்லாத நேரத்தில் என் சகோதரர் யாராவது வந்தால், அவரை உள்ளே அழைத்து உட்கார வை! அல்லது அன்னிய விருந்தினர்களுக்குப் பணிவிடை செய்! அவர்களை கவனித்துக் கொள்!'' என்றெல்லாம் கூறுவது எப்படி சரியாகும் என்பதை சிந்திக்க வேண்டும்.

சிலர், ''என் மனைவிமேல் எனக்கு நம்பிக்கை இருக்கிறது; எனது தம்பியின் மீது நம்பிக்கை இருக்கிறது; எனது தந்தையின் சகோதரர்களுடைய மகன்கள் மீது நம்பிக்கை இருக்கிறது'' என்று கூறுகிறார்கள்.

அவர்களுக்குச் சொல்கிறோம்: ''உங்கள் நம்பிக்கை சரியானதுதான். அதை விட்டு விடாதீர்கள்; சந்தேகப்பட முடியாத ஒருவரின் மீது சந்தேகப்பட்டு விடாதீர்கள். ஆனால், அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறியுள்ள ஒன்றை நீங்கள் நினைவில் கொள்ளவேண்டும்."

"எந்த ஓர் ஆணும் அன்னியப் பெண்ணுடன் தனித்திருக்க வேண்டாம். அப்படி இருந்தால், அங்கே ஷைத்தானும்

அவர்களுடன் மூன்றாமவனாக இருப்பான்.''

(ஜாமிவுத் திர்மிதி)

இந்த நபிமொழி அனைத்து மக்களையும் உள்ளடக்கிப் பேசுகிறது. அதாவது, இறையச்சம் உள்ளவர்களும் இதில் அடங்குவார்கள்; மற்றவர்களும் அடங்குவார்கள். எவரும் விதிவிலக்குப் பெற இயலாது. இவற்றை எழுதிக் கொண்டிருக்கிற நேரத்தில் என் செவிகளுக்கு ஒரு தகவல் எட்டியது.

ஒருவர் ஒரு பெண்ணை மணமுடித்தார். அவளைத் தமது வீட்டிற்கும் அழைத்து வந்து நல்ல முறையில் இல்லறம் நடத்திக் கொண்டிருந்தார். இந்நிலையில் அவருடைய தம்பி, அடிக்கடி வீட்டிற்கு வருகிற வழமை உள்ளவராக இருந்தார். அப்போது அவர் தமது அண்ணியான, அண்ணன் மனைவியிடம் அவளை மயக்கும் விதத்தில் கவர்ச்சிகரமாகப் பேசுவார். விளைவு? அந்தப் பெண் தன் கணவனை வெறுக்க ஆரம்பித்தாள்; அவருடைய தம்பியை விரும்ப ஆரம்பித்தாள்.

இது, அவளுடைய வாழ்வில் இரண்டு பெரிய பிரச்சினைகளுக்கு வழி வகுத்தது. ஒன்று, தன் கணவனிடமிருந்து 'தலாக்' வாங்கவும் அவளால் முடியவில்லை. இன்னொன்று, விபசாரத்தில் விழாமலும் இருக்க முடியவில்லை.

சிந்தியுங்கள். எவ்வளவு பெரிய வேதனைக்குரிய செயல் இது!

இந்தச் சம்பவத்திலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்னவென்றால், பெரியதொரு குழப்பமும், ஒழுக்கக் கேடும் அக்குடும்பத்தில் உண்டாகி விட்டது என்பதே! அக்குழப்பத்திற்குப் பிறகு ஏற்படவிருக்கும் பிரச்சினைகளோ இன்னும் மோசமானவை. அதாவது, மானக்கேடான, அருவருக்கத்தக்க காரியங்கள் நடந்து, தகாத வழியில் சந்ததிகள் உருவாகிற இழிவைச் சந்திக்க வேண்டியதாகிறது.

---------------

# குடும்ப சந்திப்புகளில் ஆண் பெண் கலப்பு

குடும்பச் சந்திப்புகளின்போது ஆண்களை விட்டுப் பெண்களைப் பிரிக்க வேண்டும்.

பொதுவாகவே மனிதன், மக்களைச் சந்தித்துப் பேசி இன்புறும் பழக்கம் உள்ளவனாக இருக்கிறான். எல்லோருக்கும் நண்பர்கள் இருப்பார்கள். நண்பர்களுக்குள் சந்திப்பு அவசியமான ஒன்றே.

சொந்த பந்தங்களுக்கு இடையில் சந்திப்புகள் நிகழும் போது ஆணும் பெண்ணும் மார்க்க வரம்புகளை மீறி, முறையற்று கலந்துரையாடுவது கட்டாயம் தடுக்கப்பட வேண்டியதாகும்.

ஆணும் பெண்ணும் முறையின்றி கலந்துரையாடுவதை மார்க்கம் வன்மையாகக் கண்டிக்கிறது. அதற்கு மிகப் பெரியதோர் ஆதாரமாக ஸூரா அல் அஹ்ஸாபின் 53-ஆம் வசனத்தை அறிகிறோம். அதில் அல்லாஹ் கட்டளையிடுகின்றான்:

“...நபியுடைய மனைவிகளிடம் யாதொரு பொருளை நீங்கள் கேட்(கும்படி நேரிட்)டால், (நீங்கள்) திரை மறைவிலிருந்து கொண்டே அவர்களிடம் கேளுங்கள். இது உங்கள்

உள்ளங்களையும், அவர்களுடைய உள்ளங்களையும் பரிசுத்தமாக்கி வைக்கும்." (அல்குர்ஆன் 33 : 53)

குடும்பச் சந்திப்புகளில் ஆணும் பெண்ணும் எந்தக் கட்டுப்பாடும் இன்றி கலந்துரையாடுவது பெரிய தவறுகளையும் தீய பின்விளைவுகளையும் உருவாக்கி விடுகிறது. அந்த தீய பின்விளைவுகள் பின்வருமாறு:

**முதலாவது,** இப்படியான சூழ்நிலைகளில் பெண்கள் தங்களது ஹிஜாபை (பர்தாவை) விட்டு விடுகிறார்கள்; அல்லது அரைகுறையாக ஹிஜாபைப் பேணுகிறார்கள்.

ஒரு பெண் தனது அலங்காரங்களைத் தன் கணவனைத் தவிர வேறு எந்த அன்னிய ஆணிடமும் வெளிப்படுத்தக் கூடாதென்று அல்லாஹ் தடுத்திருக்க, அந்தப் பெண்ணோ அவற்றை அன்னியர்களுக்கு வெளிப்படுத்தி விடுகிறாள்.

அல்லாஹ் கட்டளையிடுகிறான்:

"(பெண்கள்) தங்கள் உடலில் (பெரும்பாலும்) வெளியில் இருக்கக் கூடியவற்றைத் தவிர தங்கள் (ஆடை ஆபரணம் போன்ற) அலங்காரத்தை வெளிக்காட்டாமல் மறைத்துக் கொள்ளட்டும். தங்கள் முந்தானைகளால் மார்பையும் மறைத்துக் கொள்ளட்டும்." (அல்குர்ஆன் 24:31)

பலர் தங்கள் வீட்டில் கணவனுக்காக அலங்கரித்துக் கொள்வதைவிட பொது இடங்களுக்குச் செல்லும்போது அன்னியர்கள் பார்ப்பதற்காக அலங்கரித்துக் கொள்வதற்கு அதிக முக்கியத்துவம் தருகிறார்கள்.

**இரண்டாவது,** சபையில் பெண்களை ஆண்கள் பார்ப்பது மார்க்கப்பற்றையும் நல்லொழுக்கத்தையும் அழித்து, இச்சையின் தவறான தூண்டுதலுக்கு வழிவகுக்கிறது.

**மூன்றாவது,** இதனால் பல குழப்பங்களும் சண்டை சச்சரவுகளும் ஏற்படுகின்றன. ஒருவர் மற்றவரின் மனைவியைப் பார்ப்பது, அவளுடன் சிரித்துப் பேசுவது, அவளைச் சுட்டிக் காட்டிப் பேசுவதும் ஏற்படும். அல்லது இதற்கு மாற்றமாகவும் ஏற்படலாம். அதாவது, பெண், அன்னிய ஆணைப் பார்ப்பது, அவருடன் சிரித்துப் பேசுவது, அவரைச் சுட்டிக்காட்டிப் பேசுவதும் நிகழும். இதன் பிறகு கணவன் - மனைவி வீடு திரும்பியவுடன் சண்டை சச்சரவுகள், மனக்கசப்புகள் நிகழும். பிறகு, அவற்றைத் தொடர்ந்து விவாகரத்துகள் ஏற்படுகின்றன.

**நான்காவது,** பலரும் கூடியிருக்கும் ஒரு சபையில் கணவன் தன் மனைவியைப் பற்றி, மனைவி தன் கணவனைப் பற்றி குறைகூறுகின்ற அல்லது குறையாக கருதுகின்ற வாய்ப்புகளும் ஏற்பட்டு விடுகின்றன.

ஒருவரின் அழகான மனைவியைப் பார்த்துவிட்டு, “அவருடைய மனைவி எவ்வளவு அழகாக இருக்கிறாள்! என் மனைவியிடம் அந்த அழகு இல்லையே?” என்று எண்ணுவதற்கும், ‘‘அவள் எவ்வளவு அழகாகப் பேசுகிறாள்? எவ்வளவு நாகரிகமாக நடந்து கொள்கிறாள்? என் மனைவிக்கு ஒன்றும் தெரியவில்லையே?’’

என்றெல்லாம் ஆண்கள் ஆதங்கப்படுவதற்கும் வாய்ப்புகள் ஏற்பட்டுவிடுகின்றன.

அல்லது, “அந்தப் பெண் எவ்வளவு கொடுத்து வைத்தவள்? அவளின் கணவன் எவ்வளவு திறமைசாலியாக இருக்கிறான்? என் கணவனுக்கோ ஒன்றும் தெரியவில்லை; சந்திப்புகளில் எப்படி பேசுவது என்றுகூடத் தெரியவில்லை!” என்று மனைவி வருத்தப்படுவதற்கும் ஒரு வாய்ப்பை ஏற்படுத்தி விடுகிறது. இவற்றால் குடும்ப நிம்மதி குலைகிறது. கணவனுக்கும் மனைவிக்கும் இடையேயான நேச உறவு பாதித்து விடுகிறது.

**ஐந்தாவது,** அந்தச் சபைகளுக்கு வரக்கூடியவர்கள் பகட்டு அலங்காரங்களை செய்கிறார்கள்; போலித்தனமான நடவடிக்கைகளை மேற்கொள்கிறார்கள். உதாரணமாக, கணவன் தன் மனைவியிடம் “அதைச் செய்; இதைச் செய்! இங்கே வா; அங்கே போ!” என்றெல்லாம் அதிகாரம் செய்கிறான். (இது அப்பட்டமாக ஒரு போலி அதிகாரமாகும்.) ஆனால், இதே ஆண் வீட்டிற்குள் சென்ற பிறகோ, தன் மனைவியிடம் கட்டிப் போடப்பட்ட பூனையாக அடங்கி விடுகிறான்.

பெண்களில் பலர் இருக்கிறார்கள். அவர்களோ, இந்தச் சபைகளில் கலந்து கொள்வதற்காகப் பிறரிடமிருந்து தங்க நகைகளை இரவல் பெற்று, அவற்றை அணிந்து வருகிறார்கள். தாங்கள் அணிந்துள்ள தங்க நகைகள் அனைத்தும் தங்களுடையதே என்றும் பெருமையடித்துக்

கொள்கிறார்கள். இதனை அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கண்டித்துள்ளதை இவர்கள் உணர வேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

"தன்னிடம் இல்லாத ஒன்றைக் கொண்டு வெளிப் பகட்டு செய்து கொள்பவன், பொய்யான இரண்டு ஆடைகளை அணிந்தவன் போலாவான். (அதாவது, நிர்வாணமானவன் போலாவான்.) (ஸஹீஹுல் புகாரி)

**ஆறாவது,** இதுபோன்ற சந்திப்புகளில் இரவின் பெரும் பகுதிகளைப் பலர் கழிக்கிறார்கள். அதனால், நேரங்கள் வீணாவது மட்டுமின்றி, தவறான பேச்சுகளைப் பேசி பல விபரீதங்களும் நடந்து விடுகின்றன. இச்சபைகளுக்குத் தங்கள் பிள்ளைகளையும் அழைத்துச் சென்றால், அது தங்களின் பொழுது போக்கிற்குத் தடையாக இருக்குமென்று அந்தச் சிறார்களை வீட்டிலேயே தனிமையில் விட்டுச் செல்கிறார்கள். இதனால் மேலும் பல தீமைகள் உருவாகின்றன.

**ஏழாவது,** இந்த இரவுச் சந்திப்புகளால் பல பெரும் பாவங்களும் அரங்கேறி விடுகின்றன. உதாரணமாக, மது அருந்துவது, சூதாடுவது போன்றவற்றைக் குறிப்பிடலாம். தங்களை மேல்தட்டு மக்களாக நினைத்துக் கொள்வோரிடம் இத்தீய பழக்கங்கள் சகஜமாக இருக்கின்றன.

மேலும், இந்தச் சபைகளில் கலந்து கொள்வோரிடம் இறை நிராகரிப்பாளர்களின் செயல்கள் சர்வ சாதாரணமாகி

விடுகின்றன. மாற்று மதக் கலாசாரத்தைப் பின்பற்றுகின்றனர்; அவர்களின் செயல்களுக்கு ஒப்பாக நடக்கின்றனர்; அவர்களைப் போலவே ஆடை அணிகின்றனர்.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: "யார் பிற சமயத்தாருக்கு ஒப்பாகிறாரோ அவர் அவர்களைச் சார்ந்தவரே!" (முஸ்னது அஹ்மது)

---------------

# பணிப்பெண்கள், வேலைக்காரர்கள்

வீட்டில் பணிபுரியும் வேலைக்காரர்கள், பணிப் பெண்கள், வீட்டு வாகனத்தை ஓட்டுகிற ஓட்டுநர்கள் ஆகியோரிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்

பிரச்சினைகளை நீக்குவதும், அவை உருவாகும் வழிகளை அடைப்பதும் மார்க்கம் நமக்கு விதித்துள்ள கடமைகளில் ஒன்றாகும். தீமைகளின் வாசல்களை அடைப்பது மார்க்கத்தில் முக்கியத்துவம் வாய்ந்த செயல்களாகும்.

இன்று வேலைக்காரர்கள், வாகன ஓட்டுநர்கள் ஆகியோரால் குடும்பங்களில் உண்டாகிற குழப்பங்களும் பிரச்சினைகளும் சொல்லிமாளாது. பெரும்பாலான மக்களுக்கு இதைப் பற்றிய விழிப்புணர்வே இருப்பதில்லை. அப்படியே ஏதேனும் விபரீதங்களுக்கு ஆளானாலும் அவற்றின் மூலம் படிப்பினைகள் பெறுவதில்லை; சுதாரிப்பதில்லை. பலர் இந்த விசயத்தில் பல துன்பங்களுக்கு ஆளாகியும்கூட எந்தக் கவலையுமற்று இருக்கிறார்கள்.

இன்னும் சிலர் தங்களது அண்டை வீட்டிலோ, தெருவிலோ இது விசயமாக நடந்த விபரீதங்களைத் தெரிந்து கொள்கிறார்கள். ஆனாலும், அவற்றிலிருந்து பாடம் பெறுவதில்லை.

இதற்குக் காரணம் இதுதான்:

உள்ளத்தில் இறைநம்பிக்கை (ஈமான்) பலமாக இல்லை; உள்ளங்களையும் செயல்களையும் அல்லாஹ் கண்காணித்துக் கொண்டிருக்கிறான் என்ற அச்சம் ஆழமாக இல்லை!

இச்சிறிய நூலில், வீட்டு வேலைக்காரர்களாலும் வாகன ஓட்டுநர்களாலும் ஏற்படுகிற தீமைகளைப் பற்றி சுருக்கமாகக் கூற விரும்புகிறேன்.

எவருக்கு அல்லாஹ் நல்ல உள்ளத்தைக் கொடுத்தானோ, எவர் தமது வீட்டில் நல்ல ஒழுக்கங்களைப் பேண விரும்புகிறாரோ அவருக்கு இவை நல்லுபதேசங்களாகும்.

## பணிப்பெண்களால் விளையும் தீமைகள்

**1.** ஒருவரை ஒருவர் மயக்குவது அங்கு நடக்கலாம். அதாவது, வீட்டிலுள்ள ஆண்களை குறிப்பாக, வாலிபர்களை அவர்கள் மயக்கி விடலாம். பொதுவாகவே பணிப்பெண்கள் தங்களை நல்ல முறையில் அலங்கரித்து கொண்டவர்களாகவே இருக்கிறார்கள். அதிலும், அவர்கள் தனிமையில் இருக்கிற சூழல்களின்போது, அந்த வீட்டு வாலிபர்களை மயக்குவதற்கான வாய்ப்புகள் அமைந்து விடுகின்றன.

அந்த வாலிபர்கள் தங்கள் அறையில் தனிமையில் இருக்கும்போது, இவர்கள் அவர்களிடம் ஏதாவது சில தேவைகளுக்காகவோ, எதையேனும் கொடுப்பதற்காகவோ, வாங்குவதற்காகவோ செல்கிறார்கள். அல்லது இந்தப்

பணிப்பெண்கள் தங்கள் அறையில் தனித்திருக்கும்போதோ, சமையலறையில் வேலையில் ஈடுபட்டிருக்கும்போதோ, மற்ற நேரங்களிலோ அந்த வாலிபர்கள் தங்கள் தேவைகளைக் கேட்பதற்காக, எதைப் பற்றியேனும் விசாரிப்பதற்காகவோ அவர்களிடம் செல்கிறார்கள்.

இதுபோன்ற சூழ்நிலைகளில் பல குற்றங்கள் நிகழ்ந்து விடுகின்றன. அந்தக் குற்றங்களைக் கண்டவர்கள், அவற்றைத் தவிர்க்க ஏதாவது முயற்சி எடுக்கின்றார்களா என்றால், அதுவும் இல்லை. பெரும்பாலும் அப்படி முயற்சி எடுப்பவர்களை நாம் பார்க்க முடிவதில்லை.

இவர்களில் சிலர் அந்தக் குற்றங்களைக் கண்டித்தாலும் சாதாரணமாகவே கண்டிக்கிறார்கள்.

அல்குர்ஆனில் அல்லாஹ் கூறுகிற யூஸுஃப் عليه السلام அவர்களுடைய வரலாற்றில், எப்படி அந்த மிஸ்ருடைய மந்திரி தம் மனைவியின் தவறான நடத்தைக்கு, யூஸுஃப் عليه السلام அவர்களை நோக்கி, "யூஸுஃபே! நீ இதனை இத்துடன் (மறந்து) விட்டுவிடு" என்று கூறிவிட்டு, தன் மனைவியிடம், "நீ உன் பாவத்திற்கு மன்னிப்புத் தேடிக்கொள்" என்றாரோ, அதைப்போல நடந்து கொள்கிறார்கள்.

தீவிரமான எந்த நடவடிக்கையும் எடுக்காமல், நெருப்பை வெடிமருந்து அருகிலேயே விட்டுவிடுகிறார்கள்; சூழ்நிலையை மாற்றுவதில்லை. இதன் மூலம் பெரும் பெரும் பிரச்சினைகள் உருவாகின்றன.

இதேபோல், இங்கு அவசியம் குறிப்பிட வேண்டிய இன்னொரு விஷயம், சில பணிப் பெண்கள் தங்களிடம் இருக்கின்ற தவறான நடத்தைகளையும், பழக்க வழக்கங்களையும் தாங்கள் பணிபுரியும் வீட்டிலுள்ள வாலிபப் பெண்களுக்கும் கற்றுக் கொடுத்து விடுகிறார்கள். தங்களிடமுள்ள கெட்ட பழக்கங்களுக்கு அவர்களையும் பழக்கப்படுத்தி விடுகிறார்கள். இதைக் குறித்தும் நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

**2.** பணிப்பெண்கள் இருக்கிற தைரியத்தில் பல குடும்பங்களில் குடும்பத்தைப் பொறுப்புடன் நிர்வகிக்க வேண்டிய பெண்கள், தங்கள் கடமைகளை மறந்து விடுகிறார்கள்; பொறுப்புகளை அலட்சியம் செய்து விடுகிறார்கள்; சோம்பேறித்தனத்தை வழமையாக்கிக் கொள்கிறார்கள். திடீரென பணிப் பெண்கள் எங்காவது சென்று விட்டால், பிறகு வீட்டைப் பராமரிப்பது அவர்களுக்கு ஒரு சோதனையாக மாறிவிடுகிறது.

**3.** பிள்ளை வளர்ப்பில் பல பிரச்சினைகளும் பொறுப்பற்ற போக்குகளும் உருவாகின்றன. பணிப் பெண்களால் வளர்க்கப்படுகிற பிள்ளைகள், தவறான ஒழுக்கங்களைப் பழகிக் கொள்கிறார்கள். உதாரணமாக, பணிப் பெண் மாற்று மதத்தைச் சேர்ந்தவளாக இருந்தால், குஃப்ர்-இறைநிராகரிப்பை ஏற்படுத்துகின்ற செயல்களை அந்தப் பிள்ளைகளுக்கு கற்றுக் கொடுத்து விடுகிறாள். அல்லது அந்தப் பிள்ளைகள் எதார்த்தமாகவே அப்பணிப் பெண்ணிடமிருந்து கற்றுக்கொள்கிறார்கள்.

எத்தனையோ வீடுகளில் அந்த வீட்டாரின் பிள்ளைகளுடைய நெஞ்சில் சிலுவைகள் தொங்கிக் கொண்டிருப்பதை நாம் பார்க்க முடிகிறது. இதற்கு என்ன காரணம்? அந்த வீடுகளில் வேலை செய்கிற பெண்கள் கிறித்தவப் பெண்களாக இருப்பதேயாகும். அவர்கள் தங்களது வணக்க வழிபாடுகளைச் செய்துவிட்டு, அந்த வீட்டுப் பிள்ளைகளை அழைத்து சில இனிப்புகளை வழங்குகிறார்கள். பிறகு 'இது இயேசு நமக்குத் தந்தது' எனக் கூறி, அந்தப் பிள்ளைகளின் உள்ளத்தில் இயேசுவின் மீதான நம்பிக்கையை உண்டாக்கி விடுகிறார்கள். இப்படிப்பட்ட குறுக்கு உத்திகளைக் கையாண்டு தங்கள் மதத்தை அவர்கள் பரப்புகிறார்கள்.

இன்னும், சில வீடுகளில் வேலை செய்கிற இணை வைக்கின்ற பணிப்பெண் அந்த வீட்டில் சிலைகளை வைத்துக் கும்பிடுகிறாள். இதுவும் பிள்ளைகளிடம் மன மாற்றங்களை ஏற்படுத்துகிறது.

இதுமட்டுமின்றி, அந்தப் பணிப்பெண்கள் தங்களது மதச் சடங்குகளையும் பண்டிகைகளையும் தாங்கள் பணிபுரிகிற வீடுகளிலேயே கொண்டாடுகிறார்கள். அப்போது அந்த வீட்டாரையும், அவர்களின் பிள்ளைகளையும் கூட அவற்றில் ஈடுபடுத்தி விடுகிறார்கள். இதனால் அவர்களின் பண்டிகைகளில் கலந்து கொள்கின்ற குற்றத்திற்கு நமது வீட்டாரும் பிள்ளைகளும் ஆளாகிவிடுகிற அவலநிலை உண்டாகி விடுகிறது.

பணிப்பெண்களின் வளர்ப்பில் இருக்கிற குழந்தைகள்,

தாயின் அரவணைப்பையும் பாசத்தையும் இழக்கக்கூடிய நிலையும் உருவாகி விடுகிறது. தான் பெற்றெடுக்காத குழந்தைகளுக்கு நிச்சயமாக ஒரு பணிப் பெண்ணால் தாயின் பாசத்தைக் கொடுத்து விட முடியாது.

மேலும், இந்தப் பணிப்பெண்களால் ஏற்படுகிற செலவினங்கள், ஆண்களுக்கு பெரியதொரு தலை வலியாகவும் மாறிவிடலாம். பணிப்பெண்களுக்கும் வாகன ஓட்டுநர்களுக்கும் தரப்படுகின்ற சம்பளங்கள் அவர்களுக்குப் பொருளாதார நெருக்கடிகளையும் ஏற்படுத்தலாம். இந்தச் செலவினங்களை யார் ஏற்றுக் கொள்வது என்ற விஷயத்தில் குடும்பத்தில் பிரச்சினைகளும் உருவாகலாம். உதாரணமாக, கணவன் மனைவி இருவருமே வேலைக்குச் செல்பவர்களாக இருந்தால் பணியாளருக்குரிய சம்பளத்தை யார் கொடுப்பது என்பதில் சச்சரவு ஏற்பட்டு விடுகிறது. “நீதான் கொடுக்க வேண்டும்...! இல்லை, உனக்குத்தான் பொறுப்பு இருக்கிறது. நீதான் கொடுக்க வேண்டும்” என்றும் கணவன் மனைவி இருவருக்கிடையேயும் சண்டை சச்சரவுகள் நடக்கலாம்.

இதே மனைவி வெளியில் எங்கும் வேலைக்குச் செல்லாமல், தனது வீட்டு வேலைகளை மட்டும் கவனித்து வந்தால், இது போன்ற பெரிய தீங்குகளை விட்டுத் தன்னையும் தன் கணவனையும் தனது குடும்பத்தையும் பாதுகாத்துக் கொள்ளலாம்.

உண்மையில் பல நேரங்களில் நாம்தான் பிரச்சினைகளையே

உண்டாக்கிக் கொள்கிறோம். பின்னர் அதற்கான தீர்வைத் தேடுகிறோம். பெரும்பாலான சமயங்களில் நாம் எடுக்கக்கூடிய தீர்வுகள் முறையானதாக இருப்பதில்லை; அதனால் பிரச்சினைகளும் முடிவதில்லை.

**4.** பணிப்பெண்களை வைத்திருப்பதும், அவர்கள் மீது அதிகமான நம்பிக்கை வைத்திருப்பதும் பொதுவாக சோம்பேறித்தனத்தை ஏற்படுத்தக்கூடியதாகும். ஒரு மனிதன் தனக்குள் இயலாமையை உண்டாக்கிக் கொள்கிற நிலையும் இதில் ஏற்பட்டு விடுகிறது. உதாரணத்திற்கு பணிப்பெண் அமர்த்தப்பட்டுள்ள வீட்டின் வாலிபப் பெண்ணை எடுத்துக் கொள்ளுங்கள். குடிப்பதற்கு தனக்குத் தண்ணீர் தேவையென்றால்கூட, தனது பணிப்பெண்ணை அழைத்து 'நீ தண்ணீர் கொண்டு வா!' என்றுதான் ஏவுகிறாள். பிறகு இதையே பழக்கமாக்கிக் கொண்டு, தண்ணீர் குடிக்கிற தனது சுய தேவையைக்கூட தானாக நிறைவேற்றிக் கொள்ளாத சோம்பேறியாக மாறிவிடுகிறாள்.

இன்னும் சில பெண்களைப் பார்த்தால், அவர்கள் தங்களது திருமணப் பேச்சு வார்த்தையின் போதே, தாங்கள் மணமுடிக்கப் போகும் கணவனிடம் தங்களுக்கு ஒரு பணிப்பெண்ணை நியமிக்க வேண்டுமென நிபந்தனையும் இடுகிறார்கள்.

வேறு சிலரோ, தங்களது வீட்டிலிருக்கும் பணிப் பெண்ணையே, தங்கள் திருமணத்திற்குப் பிறகும் அழைத்துச் செல்கிற நிபந்தனையுடன் இருக்கிறார்கள்.

ஆக மொத்தம், இப்படிப்பட்ட பழக்கங்களால் நமது வீட்டுப் பெண்களும், பெண் பிள்ளைகளும் வீட்டில் ஒரு சிறிய வேலையாக இருந்தாலும், அதைத் தானாகத் தனித்து நின்று செய்யக்கூடிய ஆற்றலை இழந்து விடுகிறார்கள்.

அடுத்து, பணிப்பெண்களால் நமது வீட்டுப் பெண்களுக்கு வேலைகள் குறைவாகி, ஓய்வு நேரங்கள் அதிகமாகக் கிடைக்கின்றன. எனவே, அந்த நேரங்களை எப்படிச் செலவழிப்பது என்ற பிரச்சினை ஆரம்பிக்கிறது.

பெண்களில் சிலர் அந்த நேரங்களில் அதிகமாகத் தூங்குகிறார்கள். சிலர், பக்கத்து வீட்டாரிடம் சென்று, அங்கு புறம் பேசிக்கொண்டும் வீணான விசயங்களைப் பேசிக்கொண்டும் நேரத்தை வீணடிக்கிறார்கள். அல்லது பார்க்கக் கூடாது என்று மார்க்கம் தடை செய்துள்ள(ஹராம் ஆன)வற்றைப் பார்ப்பது; செவியுறக் கூடாது என்று மார்க்கம் தடுத்த (ஹராம் ஆன)வற்றைக் கேட்பது போன்றவற்றில் நேரத்தைக் கழிக்கிறார்கள். இதனால் மறுமையில் மிகப் பெரிய நஷ்டத்திற்கும் தண்டனைக்கும் ஆளாகி விடுகிறார்கள்.

**5.** குடும்பத்தினருக்கிடையில் ஏற்படுகிற பிரச்சினைகளாவன:

அ) கணவன் மனைவி இருவரையும் பிரிக்கக்கூடிய சூனியம், செய்வினை போன்றவற்றைச் செய்வது; அல்லது சூனியத்தின் மூலமாகவோ, பிற காரியங்களின் மூலமாகவோ கணவன் மனைவி இருவரின் உடல் நலத்திற்கும் கேடு விளைவிப்பது.

ஆ) (வறுமையில் இருக்கும் சில) பணியாளர்கள் வீட்டிலுள்ள பொருட்களைத் திருடிச் செல்வது.

இ) ஊர் மக்களால் மதிக்கப்படுகிற கண்ணியம் வாய்ந்த வீடுகள் பணிப் பெண்களால் தவறான அபிப்ராயம் கொள்ளப்படவும் வழி ஏற்பட்டு விடுகிறது. அதாவது, வீட்டில் இருப்போர் வெளியில் எங்கேனும் சென்றிருக்கும் நேரத்தில், அந்த வீட்டுப் பணிப்பெண் தன் உறவுக்கார ஆண்களையோ, வெளியே கடைகளில் பொருட்களை வாங்கும்போது அங்கு பழக்கமாகிவிட்ட ஆண்களையோ அழைத்து வந்து தனிமையில் பேசுகிறார்கள். இந்தப் போக்கு பல பிரச்சினைகளை உண்டாக்கி, அவ்வீட்டின் நற்பெயரைப் பாழ்படுத்தி விடுகிறது.

**6.** பணிப்பெண்கள் இருக்கிற வீடுகளில் இறையச்சம் மிக்க ஆண்களின் சுதந்திரம் பறிபோய் விடுகிறது. வீட்டிற்குள் அன்னியப் பெண் இருப்பதால், அங்குமிங்கும் சுதந்திரமாக நடமாட முடியாமல் கட்டிப் போடப்பட்டவர்கள் போல் ஆகிவிடுகிறார்கள். ஓர் அறைக்குள்ளேயே அடைந்து கிடக்கக்கூடிய நிர்ப்பந்தத்திற்கு ஆளாகிறார்கள். தங்கள் குடும்பத்தைச் சீர்திருத்த விரும்புகிற அழைப்பாளர்கள் கூட, இதுபோன்ற சூழ்நிலையில் எதுவும் செய்ய முடியாதவர்களாக ஆகிவிடுகிறார்கள்.

**7.** இன்னும், அன்னிய ஆண் பணியாளர்களோ, ஓட்டுநர்களோ வீட்டில் இருக்க, அவர்களுடன் நமது பெண்கள் தனித்திருக்கக்கூடிய சூழ்நிலைகளால் விளையும் ஆபத்துகளை என்னவென்று சொல்வது!?

நமது பெண்கள் தங்களை அலங்கரித்துக் கொண்டும் நறுமணம் பூசிக்கொண்டும் வெளியில் அவர்களுடன் செல்கிறார்கள். இதனால், அந்த அன்னிய ஆண்களின் பார்வையும் மோகமும் நமது பெண்களின் மீது ஏற்படுகிறது. ஏதோ திருமணம் செய்வது தடை செய்யப்பட்ட இரத்த உறவினர்களைப் போல நெருக்கமாகவும் இயல்பாகவும் நம் பெண்கள் இவர்களிடம் பழகுகிறார்கள், பேசுகிறார்கள். ஆலோசனைகளுக்குக் கலந்துரையாடுகிறார்கள். இதன் விளைவு அந்த இருவருக்கிடையேயும் இருக்க வேண்டிய தூரம் நீங்கி விடுகிறது. தடுக்கப்பட்ட பாவம் நிகழ்ந்து விடும்போது பல இன்னல்களும் சோதனைகளும் ஏற்பட்டுவிடுகின்றன.

அன்றாடம் நடந்து வருகிற இதுபோன்ற சம்பவங்கள் அறிவுள்ளவர்களுக்கு இவ்விஷயத்தின் விபரீதத்தைப் புரிய வைக்கும் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை.

**8.** பணிப்பெண்கள் மீது அந்த வீட்டு ஆண்கள் மோகம் கொண்டு விடும்போது, வீட்டில் சச்சரவுகள் உண்டாகி விடுகின்றன. எத்தனையோ ‘தலாக்’ பிரச்சினைகள், பணிப்பெண்களால்தான் ஏற்படுகின்றன என்பதைச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. பல பணிப்பெண்கள் தகாத உறவால் கர்ப்பமாகி விடுகிறார்கள். இந்த உண்மையை அறிய நீங்கள் மருத்துவமனைக்குச் சென்று, அங்கு நடக்கிற பிரசவங்களைப் பற்றிய விவரங்களைச் சேகரித்துப் பாருங்கள். அல்லது காவல் நிலையங்களில் இது தொடர்பாகப் பதிவு செய்யப்பட்டுள்ள புகார்களை

விசாரித்துக் கொள்ளுங்கள். அப்போது, பணிப்பெண்களின் மூலம் ஏற்பட்ட குழப்பங்களால் எத்தனை குழந்தைகள் தகாத வழியில் பிறந்திருக்கின்றன என்பதை நீங்கள் அறிந்து கொள்ள முடியும். இதனால் நமது சமுதாயத்தில் உருவாகுகின்ற பேராபத்துகளையும் புரிந்துகொள்ள முடியும்.

மேலும், தங்களை முஸ்லிம்கள் என்று சொல்லிக் கொண்டு இவர்கள் கடைப்பிடித்து வருகிற தவறான பழக்க வழக்கங்களைப் பார்க்கின்ற அந்த வீட்டு முஸ்லிமல்லாத பணியாளர்களும், ஓட்டுநர்களும் இஸ்லாமிய மார்க்கத்தைப் பற்றி என்ன நினைப்பார்கள் என்பதையும் சிந்திக்க வேண்டும்.

இவர்கள் தங்களது போக்கை சீர்திருத்திக் கொள்ளாததால், அந்த மக்கள் இஸ்லாமை ஏற்றுக்கொள்ள இவர்களே ஒரு தடையாகவும் ஆகிவிடுகிறார்கள்; இஸ்லாம் புறக்கணிக்கப்படுவதற்கு இவர்களே ஒரு காரணமாகவும் ஆகிவிடுகிறார்கள்.

இஸ்லாமைப் பின்பற்றுவதாகச் சொல்லிக் கொள்கிற இவர்களது ஒழுக்கமே இப்படி இருந்தால் பணியாளர்கள் எப்படி இஸ்லாமை ஏற்றுக் கொள்வார்கள்?

இதுவரை நாம் கூறியுள்ள காரணங்களை முன்வைத்தும் இன்னும் இவை அல்லாத பல காரணங்களை முன்வைத்தும் மார்க்க அறிஞர்களில் சிலர், எக்காரணத்தைக் கொண்டும்

பணிப் பெண்களை வீட்டில் தங்க வைக்கக் கூடாது என்கிறார்கள்.

குழப்பங்கள் எதன் மூலம் ஏற்படுகின்றனவோ அதன் அடித்தளத்தை முற்றிலும் நீக்கிவிடுமாறும், எதன் வழியாக அவை வருகின்றனவோ அதன் வாசல்களை அடைத்து விடுமாறும், தீமைகளின் வழிகளையே மூடிவிடுமாறும் வலியுறுத்துகிறார்கள்.[2]

“நீங்கள் பேசினால் நீதியாகப் பேசுங்கள்”[3] என்று அல்லாஹ் கட்டளையிடுகின்றான். இந்த வசனத்தின் அடிப்படையில் நீதி, நேர்மையுடன் சில விஷயங்களை இங்கு குறிப்பிட விரும்புகிறோம்.

**1.** முஸ்லிமல்லாத பணியாட்கள் சிலர், நமது வீடுகளில் வேலை செய்வதால் இஸ்லாமை அறிந்துகொண்டு முஸ்லிமாகி விடுகிறார்கள் என்பது உண்மைதான். அதை நாம் மறுக்கவில்லை. நமது அழைப்புப் பணியில் நாம் குறையுள்ளவர்களாக இருந்த போதிலும், அவர்கள் அல்லாஹ்வை அறிந்து முஸ்லிமாகி விடுகிறார்கள் என்பதை நாம் மறுக்கவில்லை. மேலும், நம்மிடம் வேலை செய்யக்கூடிய பணியாளர்களில் சிலரோ, பலரோ உண்மையான முஸ்லிம்கள் என்பதையும் நாம் மறுக்கவில்லை.

2. இது, அஷ்ஷைக் ஸாலிஹ் அல் உஸைமீன் ﵀ அவர்கள் கொடுத்த மார்க்கத் தீர்ப்பாகும்.

3. அல்குர்ஆன் 6:152

எத்தனையோ முஸ்லிம் வீடுகளில் உள்ள பல முஸ்லிம் பணியாளர்கள் தாங்கள் பணி செய்யும் வீட்டாரை விட மார்க்கப்பற்றும் இறையச்சமும் உள்ளவர்களாக இருப்பதை நம்மால் பார்க்க முடிகிறது.

பல முஸ்லிம் பணிப்பெண்கள் தங்களது சமையல் அறையிலேயே குர்ஆனை வைத்துக் கொண்டு, ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் ஓதிக் கொண்டிருப்பதை நம்மால் கேள்விப்பட முடிகிறது.

பல முஸ்லிம் வாகன ஓட்டுநர்கள் தாங்கள் பணிபுரிகிற வீட்டார் சுபுஹுத் தொழுகைக்கு வருகிறார்களோ இல்லையோ அவர்கள் முதலாவதாக பள்ளிக்குச் செல்வதை நம்மால் பார்க்க முடிகிறது; கேள்விப்பட முடிகிறது.

**2.** சில வீட்டாருக்கு அவர்களின் வீட்டில் பணிவிடைகள் செய்வதற்கான ஆட்கள் இல்லாத போது, தவிர்க்க இயலாத ஓர் அவசியத் தேவையாகவே பணியாளர்கள் ஆகிவிடுகிறார்கள் என்பதை கவனத்தில் நாம் கொள்ளாமல் இல்லை. வீட்டில் பிள்ளைகள் அதிகமாக இருக்கலாம். அவர்களைப் பராமரிக்க பணியாளர் தேவைப் படலாம். அல்லது, வீட்டில் தங்களது சுயதேவையைக் கூட நிறைவேற்றிக் கொள்ள இயலாத நோயாளியோ பலவீனர்களோ இருக்கலாம். அல்லது வீட்டில் பல சிரமமான வேலைகள் இருக்கலாம். அவற்றை ஒரு மனைவி, தானே தனித்து நின்று செய்ய இயலாத நிலை இருக்கலாம். இவைபோன்ற இன்னும் பல நிர்ப்பந்தமான சூழ்நிலைகள் இருக்கலாம்.

முஸ்லிம்களே! இப்போது இங்கு எழுகிற சில கேள்விகளுக்கு நாம் விடையறிய வேண்டிய அவசியம் உள்ளது.

அல்லாஹ்வின் சட்ட வரம்புகளைப் பேணுபவர் யார்? மார்க்கச் சட்டங்களைப் பேணி பணியாட்களையும் வாகன ஓட்டுநர்களையும் வீட்டில் சேர்ப்பவர் யார்? எத்தனை பேர் ஓட்டுநர்களைச் சேர்க்கும்போது, அந்த ஓட்டுநரின் மனைவியையும் அழைத்து வரச்செய்து, அவர்கள் இருவரும் ஒன்றாய் தங்குவதற்கு வசதி அமைத்துத் தருகிறார்கள்? எத்தனை பேர், தாங்கள் நியமித்துள்ள ஓட்டுநர்கள் தங்களின் பெண் பிள்ளைகளிடம் தனித்திருக்க மாட்டார் என்று உறுதி கூறமுடியும்? அல்லது எத்தனை பேர் தங்கள் வீட்டு ஆண்கள் எவரும் வீட்டுப் பணிப் பெண்ணுடன் தனித்திருக்க மாட்டார்கள் என்று உறுதி செய்ய முடியும்?

யார் இன்று தமது வீட்டுப் பணிப் பெண்ணிடம் மார்க்க முறைப்படி ஹிஜாப் அணியுமாறு கட்டளையிடுகிறார்? அல்லது அந்தப் பணிப்பெண் தன்னை அலங்கரித்த நிலையில் நடமாடுகிறபோது, அவளை ஏறிட்டும் பார்க்காமல் அவர் இருப்பாரா? அல்லது, வீட்டிற்கு அவர் வரும்போது ஏதோ ஒரு காரணத்திற்காக பணிப் பெண்ணைத் தவிர அனைவரும் வெளியே சென்றிருக்கிறார்கள்; இந்த நிலையில் அவர் தமது வீட்டிற்குள் நுழையாமல், வீட்டார் வரும் வரை வெளியிலேயே நின்று அவர்களை எதிர்பார்த்துக் கொண்டிருப்பாரா?

அல்லது, தமது வீட்டிற்கு, தாம் நியமிக்கிற பணியாட்களில் மார்க்கப் பற்றுள்ளவர்களை மட்டுமே வைப்பது என்ற உறுதியில் அவர் இருக்கிறாரா?

இப்படி மார்க்க சட்ட வரம்புகளை உறுதியுடன் முழுமையாகப் பேணக்கூடியவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்? இந்த இடத்தில் முக்கியமான இன்னொரு விசயத்தையும் நாம் குறிப்பிட வேண்டியுள்ளது.

சில ஆண்கள் தங்களது வீட்டு ஏழைப் பணிப்பெண்களை அடிமைப் பெண்கள் என்று சொல்லிக்கொண்டு மனைவியிடம் பழகுவதைப் போன்று அவர்களிடம் பழகி வருகிறார்கள். உண்மையில், இவர்கள் அல்லாஹ்வை ஏமாற்றவில்லை; தங்களைத்தான் ஏமாற்றிக் கொள்கிறார்கள்.

மேற்கூறப்பட்ட பல காரணங்களை அடிப்படையாக வைத்தே பணியாட்கள் விசயத்தில் ஒரு சரியான நிலைப்பாட்டுக்கு நாம் வரவேண்டியுள்ளது.

பணியாட்களை வைத்திருப்பவர்கள் மார்க்கம் அனுமதித்த நியாயமான காரணங்களுக்காகத்தான் நாம் பணியாட்களை வைத்திருக்கிறோம் என்பதை உறுதி செய்யட்டும். மார்க்க சட்டதிட்டங்களைப் பேணித்தான் பணியாட்கள் இருக்கிறார்களா என்பதையும் கவனிக்கட்டும்.

இது விசயத்தில் நபி யூஸுஃப் عليه السلام அவர்களுடைய வரலாற்றில் நமக்கு பல படிப்பினைகள் உள்ளன.

பணியாட்களோ, வீட்டு வாகன ஓட்டுநர்களோ இருக்கும்

போது ஒரு வீட்டில் எப்படிப்பட்ட குழப்பங்கள், தீமைகள் ஏற்படும் என்பதற்கு அந்த வரலாற்றில் நமக்கொரு படிப்பினை இருக்கிறது.

மேலும், அந்தப் படிப்பினையில் வீட்டுப் பணியாட்கள் இறையச்சம் மிக்கவர்களாக இருந்தும் வீட்டாரின் மூலம் உருவாகிற தீங்கே மிக அதிகம் என்பதையும் நம்மால் புரிய முடிகிறது.

ஸூரா யூஸுஃபின் 23-ம் வசனத்தில் அல்லாஹ் அதைக் கீழ்வருமாறு கூறுகிறான்:

அவர் இருந்த வீட்டின் எஜமானி (அவரைக் காதலித்து தன்னை அலங்கரித்துக் கொண்டு) எல்லாக் கதவுகளையும் மூடிவிட்டு தன் விருப்பத்திற்கு இணங்குமாறு, அவரை 'வாரும்' என்றழைத்தாள். அதற்கு அவர், "(என்னை) அல்லாஹ் பாதுகாத்துக் கொள்வானாக! நிச்சயமாக என் எஜமானாகிய (உன் கண)வர் என்னை மிக்க (அன்பாகவும்) கண்ணியமாகவும் வைத்திருக்கிறார். (இத்தகைய நன்மை செய்பவர்களுக்குத் துரோகம் செய்யும்) அநியாயக்காரர்கள் நலம்பெற மாட்டார்கள்" என்று கூறினார்.

(அல்குர்ஆன் 12:23)

பணியாளர்கள் அவசியம் இருந்தே ஆக வேண்டுமென்ற நெருக்கடியான நிலையைச் சொல்லக் கூடியவர்களுக்கு நமது அறிவுரை என்னவென்றால், அவர்கள் தங்களுக்குப் பணியாளர்களைத் தவிர்ப்பதற்கு பல உத்திகளைக் கையாளலாம்.

**முதலாவதாக,** உங்களால் உணவு சமைக்க முடியவில்லையென்றால், கடைத்தெருவில் விற்கக்கூடிய நல்ல உணவுகளை வாங்கிக் கொள்ளுங்கள். பாத்திரங்களைக் கழுவ முடியவில்லையென்றால், கடைகளில் காகிதப் பாத்திரங்கள் (Paper Vessels) விற்கின்றன; அவற்றை வாங்கிப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

உங்களால் உங்கள் ஆடைகளைத் துவைக்க இயலவில்லை யென்றால், வெளியில் வண்ணான்களிடம் (Laundry) கொடுத்துத் துவைத்துக் கொள்ளுங்கள்.

வீட்டைச் சுத்தமாகப் பராமரிக்க முடியவில்லையென்றால், வீடுகளை சுத்தம் செய்யும் நிறுவனங்கள் இருக்கின்றன. "ஒவ்வொரு நாளும் இன்ன நேரத்தில் வந்து சுத்தம் செய்துவிட்டுப் போய்விடக்கூடிய பணியாளர் வேண்டும்" என அவர்களிடம் பொறுப்பை ஒப்படைக்கலாம். அதற்கு மார்க்க அடிப்படையில் கண்காணிப்பையும் மேற்கொள்ளலாம்; அல்லது இது விசயத்தில் உங்கள் உறவினர்களில் யார் மார்க்க முறைப்படி உங்கள் வீட்டிற்கு வந்து போவது அனுமதிக்கப்பட்டுள்ளதோ அவர்களிடம் உதவி தேடலாம். அவர்கள் உங்கள் குழந்தைகளைப் பராமரிப்பதிலும், வீட்டுப் பணிகளிலுள்ள அவசியத் தேவைகளை நிறைவேற்றிக் கொடுப்பதிலும் நல்லதொரு தீர்வாக அமைவார்கள்.

இவ்வாறெல்லாம் முயன்ற பிறகும் உங்களுக்கு ஒரு பணிப் பெண்ணின் தேவை அவசியமாக இருப்பின்,

அப்போது ஒரு பணிப்பெண்ணை நியமிக்கலாம். ஆனால், அந்தப் பணிப் பெண்ணை முழுநேர பணியாளாக வைத்துக்கொள்ளக் கூடாது. சில குறிப்பிட்ட நேரத்தில், குறிப்பிட்ட வேலைகளுக்கு என்று பேசி நியமிக்க வேண்டும். காலையில் இவ்வளவு நேரம் அல்லது மாலையில் இவ்வளவு நேரம் என பணிக்கு அழைக்கலாம். இவற்றை மார்க்கம் அனுமதித்த முறைப்படி செய்ய வேண்டும்.

பணிப்பெண் தனது வேலையை முடித்தவுடன் சென்று விடும்படி சொல்லிவிட வேண்டும். இவற்றிலும் சில ஆபத்துகள் இருக்கத்தான் செய்கின்றன. எனினும், நிர்ப்பந்தம் என்ற அடிப்படையில் அந்த நிர்ப்பந்தத்தின் அளவுக்கேற்ப, மார்க்க வரம்புகளைப் பேணிய நிலையில் இது அனுமதிக்கப்படுகிறது.

பணியாட்கள் விஷயத்தில் நமது சமுதாயம் பல பிரச்சினைகளுக்கு ஆளாகி வருவதால் இந்த நீண்ட அறிவுரைகளை நாம் கூறியுள்ளோம். மற்ற விஷயங்களை கூறுவதற்கு முன்பாக, இறையச்சம் தொடர்பான சில உபதேசங்களை இங்கு நினைவுபடுத்த விரும்புகிறோம்.

**1.** யாருடைய வீடுகளில் பணியாட்களால் குழப்பங்களும் தீமைகளும் ஏற்படக்கூடிய வாய்ப்புகள் இருக்கின்றனவோ, அவர்கள் உடனடியாக அல்லாஹ்வைப் பயந்து கொண்டு, தீமைகளுக்கு காரணமாக இருப்பவர்களை தமது வீடுகளைவிட்டு முற்றிலும் வெளியேற்றி விடட்டும்.

**2.** "மார்க்கச் சட்டங்களைப் பின்பற்றி, பணியாட்களைப் பேணி நடந்து கொள்வேன்" என்று கூறி, அவர்களைப் பணிக்கு அமர்த்தியவர், அல்லாஹ்வை பயந்து கொள்ளட்டும். எத்தனையோ நபர்கள் இப்படி ஆரம்பத்தில் கூறிவிட்டு, தமது கட்டுப்பாடுகளை மீறிவிடுகிறார்கள். வாக்குறுதியைக் காற்றிலே பறக்கவிட்டு விடுகிறார்கள் என்பதுதான் எதார்த்தத்தில் உண்மையாக இருக்கிறது!

இறுதியாக, இந்தப் பணியாட்கள் தொடர்பான பிரச்சினையை மிகப்பெரிய படிப்பினை கொண்ட ஒரு சம்பவத்தைக் கூறி முடிக்கிறோம். பணியாட்கள் வீட்டில் இருப்பதால் ஏற்படும் பேராபத்துகளைப் பற்றி அந்தச் சம்பவம் நமக்கு மிகத் தெளிவாகச் சுட்டிக் காட்டுகிறது.

மேலும், அல்லாஹ்வின் பக்கமும், அவனுடைய குர்ஆனின் பக்கமும், அவனுடைய தூதருடைய வழிமுறையின் பக்கமும் தீர்ப்புக் கேட்டு சென்று, அவற்றின் மூலம் இஸ்லாமிய சமுதாயத்தை தூய்மைப்படுத்த வேண்டியதின் அவசியத்தை அந்தச் சம்பவம் நமக்குத் தெளிவுபடுத்துகிறது.

அபூஹுரைரா மற்றும் ஸைத் இப்னு காலித் ﷺ ஆகியோர் கூறுகிறார்கள்: நாங்கள் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடன் (மஸ்ஜிது நபவியில்) இருந்தோம். அப்போது (கிராமவாசி) ஒருவர் எழுந்து,

"அல்லாஹ்வை முன்வைத்துக் கேட்கிறேன்: தாங்கள் அல்லாஹ்வின் சட்டத்தின் படியே எங்களிடையே

தீர்ப்பளிக்க வேண்டும்'' என்று கூறினார். அப்போது அவரைவிட விளக்கமுடையவராக இருந்த அவருடைய எதிரி எழுந்து, "(ஆம்) எங்களிடையே அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளியுங்கள்!'' என்று கூறினார். (பின்னர் அந்தக் கிராமவாசி) "என்னைப் பேச அனுமதியுங்கள்'' என்று கேட்டுக்கொள்ள அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், "பேசு!'' என்றார்கள். அவர், "என் மகன் இவரிடம் வேலைக்காரனாக இருந்தான்.

அப்போது இவருடைய மனைவியுடன் விபசாரம் செய்து விட்டான். (என் மகனைக் கல்லால் அடித்துக் கொன்றுவிட வேண்டுமென்று என்னிடம் தெரிவிக்கப்பட்டது.) ஆகவே, நான் (இந்தத் தண்டனையிலிருந்து என் மகனைக் காப்பாற்றுவதற்காக) அதற்குப் பதில் நூறு ஆடுகளையும் ஓர் அடிமையையும் பிணைத் தொகையாக வழங்கினேன்.

பிறகு நான் சில அறிஞர்களிடம் விசாரித்தபோது என் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டு காலத்திற்கு நாடு கடத்தலும்தான் தண்டனையாகத் தரப்பட வேண்டும், இந்த மனிதரின் மனைவிக்குக் கல்லெறி தண்டனை (ரஜ்ம்) வழங்கப்பட வேண்டும் என்று என்னிடம் அவர்கள் தெரிவித்தார்கள்'' என்று கூறினார்.

இதைக் கேட்ட அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்கள் இருவருக்கிடையே நான் அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளிக்கிறேன்: நூறு ஆடுகளும்

அடிமையும் உன்னிடமே திருப்பித் தரப்பட வேண்டும். உன் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டு காலம் நாடு கடத்தும் தண்டனையும் வழங்கப்பட வேண்டும்" என்று கூறிவிட்டு, அருகிலிருந்த உனைஸ் ﵁ அவர்களை நோக்கி, "உனைஸ்! நீங்கள் இந்த மனிதரின் மனைவியிடம் சென்று அவள் (விபசாரக் குற்றத்தை) ஒப்புக் கொண்டால் அவளுக்குக் கல்லெறி தண்டனை வழங்குங்கள்!" என்று சொன்னார்கள்.

அப்படியே உனைஸ் ﵁ அவர்கள் அவளிடம் சென்று விசாரிக்க, அவளும் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டாள். ஆகவே, அவளுக்கு உனைஸ் கல்லெறி தண்டனை நிறைவேற்றினார்கள். (ஸஹீஹுல் புகாரி - 6827, 6828)

சில வீடுகளில் அன்னிய ஆண்கள் ஏதோ சில வேலைகளுக்காக நுழைகிறபோது, அங்குள்ள பெண்கள் அவர்கள் முன்பு சாதாரண உடையிலேயே இருக்கிறார்கள். ஹிஜாபை பேணுவதில்லை. என்ன, இந்த பெண்களுக்கு அவர்கள் ஆண்களாக தெரியவில்லையா? அல்லாஹுதஆலா இந்த ஆண்களுக்கு முன்பாக ஹிஜாபை பேணுமாறு இவர்களுக்குக் கட்டளை இடவில்லையா? எவ்வளவு வேதனையான விஷயம்!!

இதைப்போலவே இன்றைய குடும்பங்களில் இன்னொரு தீய காரியமும் நடந்து கொண்டிருக்கிறது. வயது வந்த பெண் பிள்ளைகளுக்கு அவர்களின் வீட்டிற்கு வந்து அன்னிய ஆண்கள் தனி அறையில் பாடம் நடத்துகிறார்கள்;

அல்லது ஹிஜாப் அணியாத பெண் ஆசிரியைகள், வாலிபப் பருவமடைந்த ஆண் பிள்ளைகளுக்கு பாடம் கற்றுத் தருகிறார்கள். இதுவும் மிகப் பெரிய குற்றச் செயல் என்பதில் எந்தச் சந்தேகமுமில்லை.

---------------

# அரவாணிகள்

இமாம் புகாரி ﵀ அவர்கள், தமது நூலில் "பெண்களுக்கு ஒப்பாக நடக்கக்கூடிய ஆண்களை, வீடுகளைவிட்டு வெளியேற்றுவது" என தலைப்பிட்டு ஒரு பாடத்தை அமைத்துள்ளார்கள். அதில் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் வழியாக ஒரு செய்தியைப் பதிவு செய்கிறார்கள்.

இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் பெண்களைப் போன்று ஒப்பனை செய்து கொள்ளும் ஆண்களையும், ஆண்களைப் போன்று ஒப்பனை செய்து கொள்ளும் பெண்களையும் சபித்தார்கள். மேலும், "அவர்க(ளில் அரவாணிக)ளை உங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றுங்கள்" என்றும் கட்டளையிட்டார்கள். அவ்வாறே அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் தங்களது வாழ்க்கையில் இப்படிப்பட்ட ஒருவரையும், உமர் ﵁ அவர்கள் தங்களது வாழ்க்கையில் இப்படிப்பட்ட ஒரு பெண்ணையும் வெளியேற்றினார்கள்.

(ஸஹீஹுல் புகாரி - 5886)

இதை இமாம் புகாரி ﵀ அவர்கள் 'ஆடை அணிகலன்கள்' என்ற பிரிவில் பதிவாக்கியுள்ளார்கள்.

மேலும், இமாம் புகாரி ﷺ அவர்கள் “பெண்களைப் போல நடந்து கொள்கிறவர் (களான அரவாணி)கள் ஒரு பெண்ணிடம் செல்வது தடை செய்யப்பட்டுள்ளது” என தலைப்பிட்டும் ஒரு பாடத்தை அமைத்துள்ளார்கள். அதில், உம்மு ஸலமா رضي الله عنها அவர்கள் மூலமாக அறிவிக்கப்படக்கூடிய ஒரு ஹதீஸை பதிவு செய்கிறார்கள்.

உம்மு ஸலமா رضي الله عنها அவர்கள் கூறுகிறார்கள்:

நபி ﷺ அவர்கள் என் அருகில் இருந்தார்கள். அங்கு எங்கள் வீட்டில் (பெண்களைப்போல் நடந்து கொள்ளும்) அரவாணி ஒருவனும் இருந்தான். அந்த அரவாணி என் சகோதரர் அப்துல்லாஹ் இப்னு அபீ உமைய்யாவிடம், “நாளை தாயிஃப் நகர் மீது உங்களுக்கு அல்லாஹ் வெற்றியளித்தால், ஃகைலானுடைய மகளை உனக்கு நான் அடையாளம் காட்டுகிறேன். (அவளை நீ மணந்து கொள்.) ஏனென்றால், அவள் முன்பக்கம் நாலு(சதை மடிப்புகளு)டனும் பின்பக்கம் எட்டு(சதை மடிப்புகளு)டனும் வருவாள்” என்று (அவளது மேனி அழகை வருணித்துக்) கூறினான். இதைக் கேட்ட நபி ﷺ அவர்கள், “இவன் உங்களிடம் ஒருபோதும் வரக் கூடாது” என்று கூறினார்கள்.
(ஸஹீஹுல் புகாரி - 5235)

இதை இமாம் புகாரி رحمه الله அவர்கள் திருமணம் என்ற பிரிவில் பதிவாக்கியுள்ளார்கள். இங்கு அரவாணிகள் என்போர் யார் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

“யார் பெண்களைப் போன்ற நடவடிக்கைகளை,

பாவணைகளை, பழக்க வழக்கங்களை பேச்சிலோ, நடையிலோ, ஆடையிலோ வெளிப்படுத்துகிறார்களோ அவர்களே அரவாணிகள்."

அதே சமயம், பிறப்பிலேயே ஒருவர் அப்படி படைக்கப் பட்டிருந்தால் அவர்மீது எந்தக் குற்றமுமில்லை. ஆனாலும், தம்மால் இயன்ற அளவிற்கு அதை மாற்றிக்கொள்ள அவர் முயல வேண்டும். வேண்டுமென்றே செய்தால் மட்டுமே அவரை அரவாணிகள் எனச் சொல்லப்படும். இப்படி வேண்டுமென்றே அரவாணியான ஒருவர்தான், நபி ﷺ அவர்கள் காலத்தில் ஒரு பணியாளராக நபியவர்களின் வீட்டிற்கு வந்துபோகும் வழக்கமுடையவராக இருந்தார்.

பெண்களைப் பற்றிய இச்சை எதுவும் இல்லாதவராகவே அவர் கருதப்பட்டு வந்ததால், அவரை நபியவர்கள் தடுக்கவில்லை. ஆனால், அந்த அரவாணி பெண்களைப் பற்றிய துல்லியமான வருணனைகளைச் செய்யக்கூடிய அளவிற்கு விவரமானவர் என்பதைத் தெரிந்தவுடன் உடனடியாக வீட்டை விட்டு அவரை வெளியேற்றுமாறு கட்டளையிட்டார்கள். அது மட்டுமின்றி, இனி ஒருபோதும் வீட்டிற்குள் அவர் நுழையக் கூடாது என்றும் தடை விதித்தார்கள்.

தான் பார்த்த பெண்களைப் பற்றி அன்னிய ஆண்களிடம் வருணிக்கக்கூடியவராக அந்த அரவாணி இருந்தார். இது தீமைகளுக்குக் காரணமாகி விடலாம்; அல்லது, இவரது இந்தக் குணத்தின் தாக்கம், வீட்டிலுள்ள மற்ற பெண்களுக்கும்

ஏற்பட்டு விடலாம். இது அந்த வீட்டிலுள்ள ஆண்களுக்கு பெண்களைப் போன்ற சுபாவங்களோ, பெண்களுக்கு ஆண்களைப் போன்ற சுபாவங்களோ ஏற்படுவதற்குக் காரணமாகி விடலாம். உதாரணமாக, வளைந்து நெளிந்து நடப்பது, குரலை மென்மையாக ஆக்கிக் கொள்வது மற்றும் வேறு விதமான தீய வழிமுறைகளை வழக்கமாக்கிக் கொள்வது போன்றவற்றைச் சொல்லலாம்.

இப்போது நாம் கேட்கிறோம். இன்று பெண்களைப் போல நடக்கின்ற ஆண்களாகவும், ஆண்களைப் போல நடக்கின்ற பெண்களாகவும் எத்தனையோ பேரைப் பார்க்கிறோம். வீட்டுப் பணியாளர்களில் பலர் இப்படித்தான் இருக்கிறார்கள். குறிப்பாக, காஃபிர்களை வேலைக்கு அமர்த்தியிருக்கக்கூடிய வீடுகளிலே அந்தக் காஃபிர் பணியாளர்கள் இப்படித்தான் நடந்து கொள்கிறார்கள். இதுவே உண்மை! மேலும், இதனால் நமது முஸ்லிம் வீடுகளிலுள்ள குழந்தைகளுக்குத் தீய குணங்களின் தாக்கம் ஏற்பட்டு விடுகிறது.

இன்று ஏற்பட்டுள்ள இன்னொரு சோதனையையும் இங்கு குறிப்பிட வேண்டும். முஸ்லிம் வாலிபர்கள் மத்தியில் மூன்றாவதாக ஓர் இனம் உருவாகியுள்ளது. கழுத்திலும், கைகளிலும் சங்கிலி அணிந்து கொண்டும், பெண்களைப் போல தங்களை அலங்கரித்துக் கொண்டும் இவர்கள் அலைகிறார்கள். பல வாலிபர்கள் இந்தப் பழக்கத்துடன் காணப்படுகிறார்கள்.

'ச்சீ!' என்னதொரு கேவலம்! எவ்வளவு பெரிய அசிங்கம்! இறை மார்க்கத்திற்காக அறப்போர் புரிகிற தியாகிகளாகவும், ஆக்கப்பூர்வமான பணிகளைப் புரியக்கூடிய வீரர்களாகவும் இருக்கவேண்டிய இந்த சமுதாயத்திற்கா இப்படி ஒரு நிலைமை!

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் இந்தப் போக்கை எந்த அளவு கண்டித்திருக்கிறார்கள் என்பதையும், நபித்தோழர்கள் எந்த அளவு வெறுத்திருக்கிறார்கள் என்பதையும் பின்வரும் நிகழ்ச்சியின் மூலம் அறியலாம்.

அபூஹுரைரா رضي الله عنه அவர்கள் அறிவிக்கிறார்கள்:

பெண்ணைப்போல நடந்து கொள்ளக்கூடிய ஒருவரை (-அரவாணியை) நபி ﷺ அவர்களிடம் அழைத்து வரப்பட்டது. அவர் தமது கைகளுக்கும் கால்களுக்கும் மருதாணி இட்டிருந்தார். அதைப் பார்த்த நபி ﷺ அவர்கள், "இவர் தம்மைப் பெண்களைப் போல ஆக்கிக்கொள்கிறார்.

எனவே, இவரை 'நகீயா' என்ற இடத்திற்கு அழைத்துச் சென்று அங்கு விட்டு விட்டு வந்து விடுங்கள்" என்றார்கள். 'நகீயா' என்கிற இடம் மிகவும் தூரமான ஒரு பிரதேசமாகும். தனிமையில் அவரை விட்டுவிட்டு வருவது, அவருக்கு ஒரு பாடமாகவும் அவரது குற்றத்திற்குத் தண்டனையாகவும் நபியவர்கள் ஆக்கினார்கள்.

மேலும், அவருடைய கெட்ட குணத்தால் பிறர் பாதிக்கப்படக் கூடாது என்பதற்காகவும், மற்றவர்கள் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதற்காகவும் நபியவர்கள்

இவ்வாறு செய்தார்கள். அப்போது நபித்தோழர்கள், ‘‘அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் அவரைக் கொன்று விட வேண்டியதுதானே?’’ என்று கேட்டார்கள். அதற்கு நபி ﷺ அவர்கள், “தொழுபவர்களைக் கொலை செய்வது எனக்குத் தடுக்கப்பட்டுள்ளது’’ என்று பதிலளித்தார்கள்.

(ஸுனன் அபூதாவூது)

இந்த இடத்தில் பெண்களைப்போல நடக்கும் ஆண்களின் விஷயத்தில் நபித்தோழர்கள் எந்த அளவிற்கு வெறுப்புற்று இருந்தார்கள் என்பதைக் கவனியுங்கள். “அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் அவரைக் கொன்றுவிட வேண்டியதுதானே?” என்று கேள்வி எழுப்பும் அளவிற்கு நபித்தோழர்கள் அந்த செயலை வெறுத்தார்கள்.

---------------

# தொலைக்காட்சி

தொலைக்காட்சியால் விளையும் ஆபத்துகளை விட்டு உங்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்!

இன்றைய காலத்தில் தொலைக்காட்சி பெட்டிகள் அதிகமான வீடுகளில் பயன்படுத்தப்படுகின்றன. அந்தச் சாதனங்களைக் குறைந்த அளவு பயன்படுத்துவது ஓரளவு நன்மையாகும். ஆனால், அதை அதிகம் பயன்படுத்துவது மிகப்பெரிய தீமையை உண்டாக்கிவிடும்.

குறிப்பாக, சினிமாக்களையும் சீரியல்களையும் பார்ப்பதற்கு பயன்படுத்தப்படுகிற இச்சாதனங்களால் எண்ணற்ற அபாயங்கள் இருக்கின்றன. இன்றைய முஸ்லிம் நாடுகளிலும் வீடுகளிலும்கூட, சினிமாக்களின் ஆபத்துகள் கேசட்டுகள், சீ.டி.கள், சாட்டிலைட் சேனல்கள் (மற்றும் யூடியூப்) மூலமாக பரவி வருகின்றன. அவற்றை விற்பது, வாங்குவது என்ற கலாசாரம் மிகப்பெரிய அளவில் பரவி, ஒரு சோதனையாக மாறிவருகிறது. எனவே, இந்தச் சாதனங்களின் ஆபத்துகளைப் பற்றி இனி பார்ப்போம்.

எவர் அல்லாஹ்வின் திருப்தியை நாடுகிறாரோ, அல்லாஹ்வின் கோபத்தை விட்டுத் தம்மைப் பாதுகாத்துக் கொள்ள விரும்புகிறாரோ அவர், நிச்சயமாக இங்கு நாம் கூறக்கூடிய கருத்துகளை ஆராய்ந்து பார்த்து, அவற்றைச்

செயல்படுத்தி தம் வீட்டின் நிலைமையை மாற்றிக்கொள்ள முயல்வார் என்பதில் சந்தேகம் இல்லை.

## கொள்கைக்கு ஏற்படும் ஆபத்துகள்

**1)** இணைவைப்போரின் அடையாளச் சின்னங்கள், அவர்களது மதக் கலாசாரங்கள், தவறான பழக்க வழக்கங்கள் சினிமாக்களிலும் சீரியல்களிலும் காண்பிக்கப்படுகின்றன.[4]

அன்புக்கு, நன்மைக்கு, தீமைக்கு, நோய்களைக் குணப்படுத்துவதற்கு என்று ஒவ்வொன்றுக்கும் தனித்தனிக் கடவுள்கள் இருப்பதாகக் காட்டப்படுகின்றன.

இவற்றை முஸ்லிம்கள் பார்ப்பதால், அவற்றின் தாக்கம் அவர்களிலும் உண்டாகி வருகின்றன. மாற்றார்களின் கலாசாரங்கள் முஸ்லிம்களிடையே பரவுவதற்கு இது காரணமாக ஆகிவிடுகிறது.

மேலும், கிறித்தவ மதத்தை உயர்வாகக் காட்டக்கூடிய படங்களும், அம்மதத்திற்கு மாறிவிடுமாறு ஆர்வம் ஊட்டக்கூடிய படங்களும்கூட இன்று வெளிவருகின்றன. அவற்றில் அதற்கான பிரத்யேக காட்சிகள் உருவாக்கப்படுகின்றன.

இவை மட்டுமின்றி, சிலைகளை சக்தி உள்ளவையாகக் காட்டக்கூடிய படங்களும் அச்சிலைகளிடம் வேண்டிக்

---

4. உதாரணமாக, சிலைகள் மற்றும் சிலுவைகளால் அற்புதங்கள் நிகழ்வதைப் போன்றும் ஆபத்துகளில் அவை பாதுகாக்க வருவது போன்றும் காட்சிகள் காட்டப்படுகின்றன.

கொள்ளுமாறும், நேர்ச்சை செய்து கொள்ளுமாறும், பிரார்த்திக்குமாறும் கூறுகிற படங்களும் வெளிவருகின்றன. அவற்றில் அச்சிலைகளால் நன்மை தீமைகள் உண்டாவதைப் போன்ற காட்சிகள் அமைக்கப்படுகின்றன. முஸ்லிம்கள் இதைப் பார்ப்பதால் அவர்களின் நம்பிக்கையில் பலவீனமும் கொள்கையில் தடுமாற்றமும் ஏற்படுகின்றன.

**2)** அல்லாஹ்வின் ஆற்றல்களான உயிர்ப்பித்தல், படைத்தல், மரணிக்கச் செய்தல் போன்றவற்றை சிலைகளும் சிலுவைகளும் செய்வதாகக் காட்சிகள் அமைக்கப்படுகின்றன. உதாரணமாக, சில காட்சிகளில் ஒருவர் தம் கையில் சிலுவையையோ, மந்திரக் கோலையோ வைத்துக்கொண்டு, இறந்தவரை உயிர்ப்பிப்பது போன்று காட்டப்படுகிறது. இது அல்லாஹ்வின் தன்மையுடன் மனிதனை ஒப்பாக்கும் தடுக்கப்பட்ட செயல் என்பது நன்கு தெரிந்த ஒன்றே!

**3)** ஏமாற்றுதல், சூனியம், கண்கட்டி வித்தைகள், குறி பார்த்தல், மௌட்டீக சடங்குகள் போன்றவை அவற்றில் பரப்பப்படுகின்றன. இவையெல்லாம் ‘தவ்ஹீது’ ஏகத்துவத்துக்கு முரணானவையாகும்.

**4)** சினிமா மற்றும் அவற்றின் தாக்கத்திற்கு ஆளானவர்களிடம், அதில் வருகின்ற நடிகர் நடிகைகளைக் கண்ணியப்படுத்தும் பண்பு உருவாகி விடுகிறது. உதாரணமாக, அந்தப் படங்களில் வருகிற நடிகர்களைப் பார்த்து தலைவரே என்றோ, நடமாடும் தெய்வமே என்றோ, மகான் என்றோ கூறுகிற பழக்கம்

உருவாகி விடுகிறது. மேலும், "இவர் நோயாளிகளைக் குணப்படுத்துகிறார்; நன்மையே செய்கிறார்" என்றும் புகழ்கிற மாற்றுமதப் பண்பாடு உருவாகி விடுகிறது.

**5)** இந்தப் படங்களில் பெரும்பாலும் அல்லாஹ் அல்லாதவற்றின் பெயர்களைக் கொண்டு சத்தியம் செய்யப்படுகிறது. அல்லாஹ்வின் பெயர்களையும் மார்க்கத்தையும் பரிகாசம் செய்யும் விதமான காட்சிகள் இடம் பெறுகின்றன.[5]

**6)** அல்லாஹ்வுடைய வல்லமையின் மீதும் அவனுடைய படைக்கும் ஆற்றலின் மீதும் சந்தேகம் ஏற்படுத்தப்படுகிறது. அல்லது வாழ்க்கை என்பது அல்லாஹ்வுக்கும் மனிதனுக்கும் இடையிலான போராட்டம் என்று காட்டப்படுகிறது.

இவை அனைத்தும் அல்லாஹ்வின் மீதுள்ள நம்பிக்கையை பலவீனப்படுத்துகிற செயல்களாகும்.

**7)** அல்லாஹ்வின் எதிரிகளைப் பற்றியும் அவனை நிராகரிக்கிற காஃபிர்களைப் பற்றியும் நம் மனங்களில் இருக்கும் அருவருப்பு நீக்கப்பட்டு விடுகிறது. காரணம், அந்த நிராகரிப்பாளர்கள் வியக்கத்தக்க சாகசங்களைச் செய்வதாகக் காட்டி, அவர்களைப் பற்றியும் அவர்களது சமூகத்தைப் பற்றியும் பிரமிப்பு ஏற்படுத்தப்படுகிறது. இது முஸ்லிம்களின் உள்ளங்களிலே தீய தாக்கத்தை

5. முஸ்லிம் நாடுகளில் எடுக்கப்படுகின்ற சினிமாக்களைப் பற்றி ஆசிரியர் இங்கு கூறுகிறார்.

உண்டுபண்ணி விடுகிறது. இதனால் ஒரு முஸ்லிமுக்கும் காஃபிருக்கும் இடையே இருக்க வேண்டிய மன ரீதியான பிரிவு அகற்றப்பட்டு விடுகிறது.

அல்லாஹ்விற்காகவே கோபம் கொள்கிற தன்மை எப்போது நீங்கி விடுகிறதோ, அப்போதே இந்த முஸ்லிம் அந்தக் காஃபிரைப் போன்று செயல்பட ஆரம்பித்து விடுகிறான். அவர்களின் கலாசாரத்தை ஏற்றுக்கொள்ள ஆயத்தமாகி விடுகிறான்.

## சமுதாயம் எதிர்கொள்ளும் ஆபத்துகள்

**1)** காஃபிர்கள் அந்த சினிமாக்களிலும், சீரியல்களிலும் பெரிய ஹீரோக்களாக காட்டப்படுகிறார்கள். அதன் வழியாக அவர்களைப் பற்றிய மதிப்பு மரியாதையும் பிரமிப்பும் பார்ப்பவர்களின் உள்ளங்களிலே ஏற்படுத்தப்படுகிறது.

**2)** குற்றச் செயல்கள் பரப்பப்படுகின்றன. குற்றங்களை செய்யத் தூண்டும் காட்சிகள் இடம் பெறுகின்றன. உதாரணமாக: கற்பழிப்பு, பலாத்காரம், கொலை, கொள்ளை, தற்கொலை, கடத்தல், வன்முறை போன்ற காட்சிகள் காட்டப்படுவது, பார்ப்பவர்களை அவற்றின் பக்கம் தூண்டுகின்றன.

**3)** இதுபோன்ற குற்றச் செயல்களைப் பார்த்து வளருகின்ற சமுதாயங்களில் உள்ள பலர் அக்குற்றச் செயல்களை பழக்கமாக்கிக் கொள்கின்றனர்.

**4)** திருடுவது, கடத்துவது, ஏமாற்றுவது, பொருளையோ சொத்தையோ பறிப்பது, இலஞ்சம் வாங்குவது, மோசடி செய்வது, புகைப்பது, மது குடிப்பது போன்ற பல சமூகச் சீர்கேடுகள் பகிரங்கமாகக் காட்டப்படுகின்றன. இதனால் அவற்றை அதுவரை தெரிந்திருக்காதவர்கள் கூட அவற்றைக் கற்றுக்கொண்டு, அந்தத் தீய காரியங்களைச் செய்யத் தொடங்கி விடுகின்றனர்.

**5)** பெண்களைப் போன்று ஆண்களும், ஆண்களைப் போன்று பெண்களும் நடந்து கொள்ள தூண்டப்படுகிறது. அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் இதை வன்மையாகக் கண்டித்துள்ளார்கள் என்பதை நாம் முன்பே அறிந்தோம். சில ஆண்கள் தாங்கள் சினிமாக்களில் பார்க்கும் பெண்களைப் போன்று பேசவும் நடக்கவும் செய்கிறார்கள்.

சவரிமுடியையும் நகைகள் மற்றும் பெண்ணுக்குரிய அலங்காரங்களையும் அணிந்து கொள்கிறார்கள். இதே போல் சில பெண்கள் அந்த ஆண்களைப் போன்று தாடியையும் மீசையையும் வாங்கி அணிகிறார்கள். அவர்களைப் போல் தங்களது குரல்களையும் கடினமாக்கிக் கொள்கிறார்கள்.

இப்படி சினிமாவில் பார்க்கப்படும் காட்சிகளைத் தங்களது சமூகத்திற்கு மத்தியிலும் செயல்படுத்த நினைக்கும்போது ஏற்படும் விபரீதத்தை சிந்தித்துப் பாருங்கள்.

**6)** அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், நபித்தோழர்கள், சிறந்த மார்க்க அறிஞர்கள், அல்லாஹ்வின் பாதையில்

போரிட்ட தியாகிகள் போன்றோரைத் தங்களுக்கு முன்மாதிரிகளாகவும் வழிகாட்டிகளாகவும் ஆக்கிக் கொள்வதற்குப் பதிலாக நடிகர்களையும் பாடகர்களையும் கூத்தாடுபவர்களையும் விளையாட்டுக்காரர்களையும் முன்மாதிரிகளாக, வழிகாட்டிகளாக ஆக்கப்படுகிறது.

**7)** சினிமா சீரியல்களில் மூழ்கிவிடுகின்றவர்கள் குடும்பப் பொறுப்புகளையும் குடும்பத்தினரின் அவசியத் தேவைகளையும் அலட்சியம் செய்கின்றனர். வீட்டிலிருக்கும் நோயாளிகளைக்கூட கவனிக்க முடியாத சூழ்நிலை அவர்களுக்கு ஏற்படுகிறது.

**8)** பிள்ளைகள் பெற்றோர்களுக்கு மாறுசெய்யத் துணிகிறார்கள். பிள்ளைகள் தந்தைக்கு வாங்கி வரும் பொருட்களுக்குக் கூட, அதற்குரிய கிரயத்தைக் கேட்டுப் பெறுகிறார்கள். தந்தை அதற்குரிய கிரயத்தைக் கொடுக்க வில்லையென்றால் அதை உரிமை மீறுதல், அபகரித்தல் என்று கருதுகிறார்கள்.

ஒருவர் நபி ﷺ அவர்களிடம் தனது தந்தை தன் அனுமதியின்றி தன் பொருட்களைப் பயன்படுத்திக் கொள்வதாகக் கூறினார். அதற்கு நபியவர்கள் கூறினார்கள்: “(அப்பொருட்கள் மட்டுமல்ல;) நீயும் உன் செல்வமும் உனது தந்தைக்கே (சொந்தம்)!” (ஸுனன் அபூதாவூது)

**9)** உறவினர்களைச் சந்திப்பது, அவர்களுடைய சுக துக்கங்களில் கலந்து கொள்வது துண்டிக்கப்படுகிறது; சில

சமயங்களில் சந்திப்பு ஏற்பட்டாலும் குடும்ப நிலவரங்களைப் பற்றி பேசாமல் தொலைக்காட்சிக்கு முன் எல்லோரும் வாய்மூடி அமைதியாக உட்கார்ந்து விடுகிறார்கள்.

**10)** விருந்தினரை முறையாக உபசரிப்பதில்லை; கண்ணியப்படுத்துவதில்லை; அதில் பல குறைபாடுகள் ஏற்படுகின்றன.

**11)** இத்தொலைக்காட்சி சாதனங்கள் நேரங்களை அதிகம் அழித்து விடுவதால், சோம்பேறித்தனமும் பொறுப்பற்ற தன்மையும் அதிகமாகி ஆக்கப்பூர்வமான பணிகளில் ஈடுபட முடிவதில்லை.

**12)** கணவன் மனைவி இருவருக்கிடையில் கருத்து வேறுபாடுகள், வெறுப்புகள், கோப தாபங்கள் அதிகமாகின்றன. உதாரணமாக: கணவன் தொலைக் காட்சியில் வரும் பெண்ணைப் பற்றி வருணிக்கும் போது அதற்குப் போட்டியாக அங்குள்ள மனைவி, தொலைக் காட்சியில் வரும் ஆணின் அழகை வருணிக்கிறாள்.

**13)** மிக அவசியமான உணர்வாகிய ரோஷம் அழிக்கப்படுகிறது. அதாவது, ஆண் பெண் கலந்துறவாடுவதைத் தொடர்ந்து பார்க்கப்படுவதால் மனைவி, பெண் பிள்ளைகள், சகோதரிகள் ஆகியோர் வெட்க உணர்வின்றி அன்னிய ஆண்களுக்கு முன்பு தோன்றும் கலாசாரம் உருவாகி விடுகிறது. பிறகு, இதைப் பெண்கள் தங்களின் சுதந்திரம் என்பதாகக் கருத ஆரம்பிக்கிறார்கள்.

## நற்பண்புகளுக்கு ஏற்படும் ஆபத்துகள்

**1)** தொலைக்காட்சிகளில் வரும் பெண்களை ஆண்கள் பார்க்கும்போதும் ஆண்களை பெண்கள் பார்க்கும் போதும் தகாத இச்சைகள் தூண்டப்படுகின்றன.

**2)** மறைக்கப்பட வேண்டிய இடங்களை மறைக்காமல் ஆபாசமான ஆடைகளை அணியும் பழக்கம் ஏற்படுகிறது.

**3)** ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் முறையற்ற தொடர்புகளையும் நட்புகளையும் ஏற்படுத்திக்கொள்ள வழிகள் காண்பிக்கப்படுகின்றன. ஒரு பெண்ணை எப்படி கவரலாம், அவளுடன் எப்படி பேசலாம், எப்படி பழகலாம் என்று கற்றுக் கொடுக்கப்படுகிறது.

**4)** விபச்சாரமும் மானக்கேடான செயல்களும் பரப்பபப்படுகின்றன. அவற்றில் பார்க்கும் காட்சிகளைப் போன்று இயல்பு வாழ்க்கையிலும் செயல்படுத்த விரும்புகின்றனர்.

**5)** பெண்களுக்கு அசிங்கமான நடனங்களின் மீது ஆர்வமூட்டடப்படுகிறது.

**6)** காமெடி படங்களை ஒருவர் தொடர்ந்து பார்க்கும்போது அவரின் வீரமும் கம்பீரமும் எடுபட்டு விடுகின்றன.

**7)** சினிமா சீரியல்களில் பயன்படுத்தப்படுகின்ற அசிங்கமான அருவருப்பான வார்த்தைகள் மக்கள் மத்தியில் பரவுகின்றன.

## வணக்க வழிபாடுகளுக்கு ஏற்படும் ஆபத்துகள்

1) இரவில் நீண்ட நேரம் தொலைக்காட்சி பார்ப்பதால் சுபுஹுத் தொழுகை வீணடிக்கப்படுகிறது.

2) தொழுகையின் நேரங்கள் தாமதப்படுத்தப்படுகின்றன. ஆண்கள் மஸ்ஜிதுக்குச் செல்வதைத் தவிர்க்கின்றனர். சீரியல், சினிமா, விளையாட்டு போன்றவற்றைப் பார்க்கும்போது, தொழுகைக்காக மஸ்ஜிதுக்குச் சென்றால் அவை தவறிவிடும் என்று எண்ணுகிறார்கள்.

3) வணக்க வழிபாடுகள் மீது வெறுப்பு ஏற்பட காரணமாகிறது. உதாரணமாக, தொழுகைக்காக விளையாட்டுக் காட்சிகள் நிறுத்தப்பட்டால், அதனால் தொழுகைகளை வெறுக்கிறார்கள்.

4) நோன்பாளி இப்பாவத்தில் ஈடுபடுவதால் அவருடைய நோன்பின் நன்மைகள் குறைந்து விடுகின்றன; அல்லது முற்றிலும் அழிந்து விடுகின்றன.

5) மார்க்கச் சட்டதிட்டங்கள் பழிக்கப்படுகின்றன. உதாரணமாக, பெண்கள் பர்தா அணிவதையும் ஆண்கள் பலதார மணம் புரிவதையும் கேவலமாகப் பேசப்படுகின்றன.

## வரலாற்றுக்கு ஏற்படும் ஆபத்துகள்

1) இஸ்லாமிய வரலாறு சிதைக்கப்பட்டு உண்மைகள் மறுக்கப்படுகின்றன. முஸ்லிம்கள் செய்த தியாகங்கள் மறைக்கப்படுகின்றன.

**2)** வரலாற்று உண்மைகள் மாற்றி காண்பிக்கப்படுகின்றன. உதாரணமாக, அநீதி இழைத்தவர்களை அநீதி இழைக்கப்பட்டவர்களாகவும் யூதர்களையும் கிறித்தவர்களையும் நேர்மையானவர்களாகவும் நீதியாளர்களாகவும் காண்பிக்கப்படுகின்றது. முஸ்லிம்களை நேர்மையற்றவர்களாகவும் பயங்கரவாதிகளாகவும் சித்தரிக்கப்படுகின்றது.

**3)** இஸ்லாமிய வீரர்கள் குறித்து எடுக்கப்படும் தொடர்களில் அவர்களுடைய உண்மை வரலாறு மறைக்கப்பட்டு பொய்கள் வரலாறுகளாக காண்பிக்கப்படுகின்றன. பாவிகளும் தீயவர்களும் அவர்களுடைய பெயர்களில் தோன்றுகிறார்கள். மேலும் அவற்றில் காதல் மற்றும் காமக் காட்சிகள் இணைக்கப்படுகின்றன.

**4)** காஃபிர்களை பெரிய வீரர்களாகவும் பெரும் போர்க் கருவிகள் உடையவர்களாகவும் காண்பிக்கப்பட்டு முஸ்லிம்களின் உள்ளங்களில் கோழைத்தனம் புகுத்தப்படுகிறது.

## மன ரீதியாக ஏற்படும் ஆபத்துகள்

**1)** வன்முறைகள், சண்டைகள், கொடூரங்கள் நிறைந்த காட்சிகளைப் பார்ப்பதால் முரட்டுக் குணம் ஏற்படுகிறது; சண்டையிடும் பண்பு வளர்கிறது.

**2)** பேய், பிசாசு, ஆவி படங்களால் மனதில் திகில் ஏற்பட்டு தூக்கத்தில்கூட பயந்து திடுக்கிடும் நிலைமை ஏற்படுகிறது.

3) பிள்ளைகளின் எதார்த்த நிலைமைகள் பாழ்படுத்தப்படுகின்றன. உண்மைக்குப் புறம்பான காட்சிகள் காட்டப்படுவதால் அவற்றின் தாக்கங்கள் பிள்ளைகளிடம் ஏற்படுகின்றன. குறிப்பாக, கார்ட்டூன் படங்களால் இத்தீமைகள் பிள்ளைகளின் நிஜ வாழ்க்கையில் நிகழ்கின்றன.

## உடல் ஆரோக்கியத்திற்கு ஏற்படும் ஆபத்துகள்

1) கண் பார்வை குன்றி விடுகிறது. பார்வை அல்லாஹ்வின் அருளாகும். அதைப் பற்றியும் நாளை மறுமையில் அவன் விசாரணை செய்வான்.

2) வன்முறை காட்சிகளைப் பார்ப்பதால் மன அழுத்தங்களும் நரம்புத் தளர்ச்சியும் இரத்தக் கொதிப்பும் மாரடைப்பும் அதிகமாகின்றன. பார்ப்பவர்களும் அதுபோன்ற செயல்களைத் தங்களது வாழ்வில் செயல்படுத்துகின்றனர்.

3) நீண்ட நேரம் இரவில் விழித்திருப்பதால் உடல் ஆரோக்கியம் கெடுகிறது.

4) சூப்பர்மேனைப் போன்ற கதாபாத்திரங்கள் அமைந்த படங்களைப் பார்த்து விட்டு அவற்றில் காட்டப்படும் சாகசங்களை நிஜ வாழ்க்கையில் செய்ய முயற்சிக்கின்ற பிள்ளைகளின் உடலுக்கு பெரிய ஆபத்துகள் விளைகின்றன. இதைப்போலவே ரெஸ்லிங் என்னும் மல்யுத்தத்தைப் பார்த்து அவர்களைப் போல் நடிக்க நினைப்பவர்களுக்கும் பல கேடுகள் நிகழ்கின்றன.

## பொருளாதாரத்திற்கு ஏற்படும் ஆபத்துகள்

**1)** இதற்காக தொலைக்காட்சிகள் வாங்குவது, அவற்றைப் புதிது புதிதாக மாற்றிக் கொண்டு இருப்பது, கேசட்டுகள், சீடிகள், டீவிடிகள் வாங்குவது, அவற்றை வைப்பதற்கான அலமாரிகள் வாங்குவது, அவை பழுதாகிவிட்டால் சீர்படுத்துவதற்கு செலவழிப்பது ஆகியவற்றால் செல்வம் விரயமாகிறது.

**2)** தொலைக்காட்சியில் வரும் விளம்பரங்களைக் கண்டு, தேவையற்ற ஆடம்பரப் பொருட்களையும் அலங்காரங்களையும் வாங்கிச் சேகரிக்க முயல்கிறார்கள். மேலும், உலகப் பொருட்களின் மீது மோகம் உண்டாகிறது.

---------------

# தொலைப்பேசி

புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட சாதனங்களில் தொலைப்பேசி, பயன் நிறைந்ததும் தற்காலத்தின் அவசியத் தேவைகளில் ஒன்றுமாகும்.

தொலைப்பேசி நம் நேரங்களை மிச்சமாக்குகிறது; தூரத்தைச் சுருக்குகிறது; பல திசைகளில் தொடர்பு கொள்ள வழி செய்கிறது. இதனை நன்மையான காரியங்களுக்குப் பயன்படுத்த வேண்டும். உதாரணமாக, தொழுகைக்கு எழுப்புவது, மார்க்கச் சட்டங்களைக் கேட்பது, உறவினரைச் சேர்த்து வாழ்வது, மக்களுக்கு நல்லுபதேசம் செய்வது, இன்னும் இவை போன்ற நல்ல காரியங்கள்.

ஆனால், அதே சமயம் தொலைப்பேசியால் பெரிய விபரீதங்களும் தீமைகளும் நடந்து வருகின்றன. எத்தனையோ குடும்பங்கள் இதனால் அழிந்து நாசமாகியுள்ளன. ஆண்களையும் பெண்களையும் இழிவான குணங்களில் இது தள்ளியிருக்கிறது. இதைப் பயன்படுத்துவது எளிதாக இருப்பதாலும், வீட்டிற்கு வெளியில் இருந்து கொண்டே நேரடியாக உள்ளே வருவதற்கு இது வழியாக இருப்பதாலும் இதில் அதிகமான ஆபத்துகள் மறைந்திருக்கின்றன.

## தொலைப்பேசியின் தீமைகள்

**1.** சங்கடங்களை ஏற்படுத்தும் முரண்பாடுகள்.

**2.** அன்னிய ஆணுடன் பெண்ணுக்குத் தொடர்பு ஏற்படுதல். பின்னர், அத்தொடர்பு வளர்ந்து மானக் கேடான காரியங்கள் நிகழ்ந்து விடுதல். தனது தவறை உணர்ந்து திருந்திய வாலிபர் ஒருவர் என்னிடம் கூறினார்: போனில் அந்நிய ஆணுடன் தொடர்பு ஏற்பட்ட பெண் அவனுடன் வெளியில் செல்லாமல் இருப்பது என்பது மிகக் குறைவு. அதற்குப் பின் நிகழக்கூடிய மானக்கேடான செயல்களை அல்லாஹ்தான் மிக அறிந்தவன்.

**3.** பொறாமைக்காரர்களும் கோள் சொல்பவர்களும் இவற்றைத் தவறாகப் பயன்படுத்துவதால் குடும்ப உறவுகளில் பாதிப்பு நிகழ்தல்.

**4.** வீணான பேச்சுகளையும் பயனற்ற உரையாடல்களையும் தொடர்வதால் நேரங்கள் வீணாகுதல்; அல்லாஹ்வை நினைவு கூர்வது மறக்கடிக்கப்படுதல்; பெரும்பாலான பெண்கள் பொழுதுகளை வீணடிப்பதற்கே இதைப் பயன்படுத்துதல். இவ்வாறு பல தீமைகள் தொலைப் பேசியால் நிகழ்கின்றன.

--------------

## தொலைப்பேசியால் ஏற்படும் பிரச்சினைகளுக்கு தீர்வுகள்

**1.** வீட்டிற்கு உள்ளும் வீட்டிற்கு வெளியிலும் அதைத் தவறாகப் பயன்படுத்துபவர்களைக் கண்காணித்து அவர்களுக்கு அழகிய முறையில் அறிவுரை கூறவேண்டும்.

**2.** அறியாத ஒருவர் மூலமாக தொலைப்பேசியில் ஒரு செய்தி கிடைத்தால் அது உண்மையா என்பதை அல்லாஹ்வின் கட்டளைக்கேற்ப உறுதி செய்து கொள்ளவேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்:

நம்பிக்கையாளர்களே! தீயவன் ஒருவன் உங்களிடம் ஒரு செய்தியைக் கொண்டு வந்தால், (அதன் உண்மையை அறியும் பொருட்டு அதனைத்) தீர்க்க விசாரணை செய்து கொள்ளுங்கள். (இல்லையெனில், அவனுடைய சொல்லை நம்பி) அறியாமையால் சில மக்களுக்கு நீங்கள் தீங்கிழைத்து விட்டுப் பின்னர், நீங்கள் செய்தவற்றைப் பற்றி நீங்களே துக்கித்துக் கவலைப்படும்படியும் நேர்ந்து விடும்.

(ஸூரா அல்ஹுஜுறாத் 49:6)

**3.** இஸ்லாமிய ஒழுக்கங்களைக் கற்றுக் கொடுக்க வேண்டும். இது மனிதனை எல்லா நேரத்திலும் சீர்படுத்தக் கூடியதாகும். இஸ்லாமிய ஒழுக்கங்களைப் பெற்றவர் தமக்குக் கண்காணிப்பாளரோ, பொறுப்பாளரோ இல்லையென்றாலும் தவறுகளை விட்டு தம்மைப் பாதுகாத்துக் கொள்வார்.

**4.** தொலைப்பேசியால் நன்மைகளைவிட தீமைகளே மிகைத்திருக்குமாயின் முற்றிலும் அதன் இணைப்பைத் துண்டித்து விடுவதே நன்மையாகும்.[6]

---------------

6. குறிப்பு: இன்று கைத் தொலைப்பேசிகளால் நிகழ்கின்ற ஆபத்துகளை அன்றாடம் செய்திகளில் நாம் பார்த்து வருகிறோம். குறிப்பாக வயது பெண்களையும் பொதுவாக குடும்பப் பெண்களையும் குறி வைத்து அவர்களை மானக்கேடான விஷயங்களில் தள்ளுவதற்காகவே பல வீணர்கள் இந்த கைத் தொலைப் பேசியை பயன்படுத்துகிறார்கள். மேலும், கைத் தொலைபேசியில் பதிவிறக்கம் செய்துள்ள யூடியூப், பேஸ்புக் இன்னும் இதுபோன்ற சமூக பொது தளங்களாலும் எல்லா தரப்பு சமுதாயப் பெண்களும் சீரழிக்கப்படுகிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது.

# மாற்றாரின் மத அடையாளங்கள்

மாற்றாருடைய மத அடையாளங்களையும் அவர்கள் வழிபடுகின்ற சிலைகளையும் உருவப்படங்களையும் வீட்டிலிருந்து அகற்ற வேண்டும்

ஆயிஷா ﵂ அவர்கள் அறிவிக்கிறார்கள்: வீட்டில் உருவங்கள் இருந்தால் அதை அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் உடைக்காமல் விடமாட்டார்கள்.

(ஸஹீஹுல் புகாரி)

இன்றைய காலக்கட்டத்தில் நாம் பெரும் சோதனையில் இருக்கிறோம். மாற்றார்கள் தயாரிக்கும் பொருட்களில் அவர்களுடைய மதச்சின்னங்கள், அவர்கள் வழிபடுகின்ற தெய்வங்களின் உருவங்கள் மற்றும் பெண்களின் கவர்ச்சிப் படங்கள் காணப்படுகின்றன.

முஸ்லிமுடைய வீடுகளில் இத்தகைய உருவங்கள் இருப்பது தடை செய்யப்பட்டதாகும். அவற்றை அடியோடு அழித்துவிட வேண்டும். ஆகவேதான், அல்லாஹ்வுடைய தூதர் ﷺ அவர்கள் உருவங்களைப் பார்த்தால் அவற்றை உடனே அழித்தார்கள். இது மார்க்கத்தில் எல்லை மீறுவதாக ஆகாது.

ஏனெனில், மார்க்கத்தில் எல்லை மீறுவதைத் தடுத்த அல்லாஹ்வுடைய தூதர்தான் இப்படி செய்திருக்கிறார்கள். வீட்டில் உள்ளவர்கள் பாத்திரங்களையோ விரிப்புகளையோ இன்ன பிற பொருட்களையோ வாங்க நினைக்கும் போது ஏகத்துவ இறை வழிபாட்டுக்கு முரணான அடையாளங்களும் உருவங்களும் அவற்றில் இருப்பதைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும்.[7]

சில சமயங்களில் பிற மதத்தாரின் அடையாளச் சின்னங்கள் நாம் வாங்கும் பொருட்களில் உண்மையாகவே வரையப்பட்டுள்ளனவா என்று நம்மால் உறுதி செய்ய முடியாத அளவிற்குத் தெளிவாகத் தெரியவில்லையென்றால் அவற்றை அழிக்க வேண்டுமென்ற அவசியமில்லை.

--------------

7. அவ்வாறே பெண்களின் ஆபாசமான படங்கள் பிரசுரிக்கப்பட்டுள்ள பொருள்களையும் வாங்குவதை தவிர்க்க வேண்டும். முடியவில்லை யென்றால் வாங்கியவுடன் அவற்றில் உள்ள படங்களை உடனடியாக அழித்துவிட வேண்டும்.

# உயிருள்ளவற்றின் உருவங்கள்

பலர் தங்கள் வீடுகளை அலங்கரிப்பதற்காக உருவப் படங்கள் மற்றும் உருவ பொம்மைகளை சுவர்களிலும் அலமாரிகளிலும் வீட்டு ஓரங்களிலும் வைத்திருக்கிறார்கள்.

மார்க்கம் இதைத் தடை செய்கிறது. உருவம் வரைபவர்களை அல்லாஹ்வுடைய தூதர் ﷺ அவர்கள் சபித்திருக்கிறார்கள். உயிருள்ளதை வரைபவர்கள் நாளை மறுமையில் அதற்கு உயிர் கொடுக்கும்படி நிர்ப்பந்திக்கப்படுவார்கள். மிக அவசியமான நிர்ப்பந்தத் தேவைகள், உதாரணமாக அடையாள அட்டை (Identity Card), பாஸ்போர்ட் ஆகியவை குற்றவாளிகளைக் கண்டுபிடிக்க உதவுவதால் இவற்றுக்காக பயன்படுத்திக் கொள்ளலாம்.

உருவப்படத்தை வைத்திருப்பது அதனைக் கண்ணியப்படுத்துவதாக ஆகிவிடுகிறது. இது இறுதியில் இணைவைக்கும் செயலுக்குக் காரணமாகிவிடும். இறந்துவிட்ட முன்னோர்களின் உருவங்களை தொங்க விடுவதால் அவர்களைப் பார்க்கும் போதெல்லாம் துக்கம் ஏற்படலாம்; அல்லது பெருமை ஏற்படலாம். “நாங்கள் உருவங்களுக்கு ஸஜ்தா செய்வதில்லையே... நாங்கள் தொங்க விடுவதில் என்ன தவறு?” என்று கூறுபவர்கள் உண்டு. இவ்வாறு கூறுவது தவறாகும். ஏனெனில்,

உருவப்படங்களை தொங்கவிடுவதால் அவ்விடங்களுக்கு வானவர்கள் வருகை தர மாட்டார்கள்.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: ''உருவங்கள் உள்ள வீட்டில் வானவர்கள் நுழைய மாட்டார்கள்.'' (ஸஹீஹுல் புகாரி)

''உருவம் வரைபவர்கள் அல்லாஹ்விடத்தில் மறுமையில் கடினமான தண்டனைக்குரியவர்களாவர்.''
(ஸஹீஹுல் புகாரி)

''எவர்கள் இந்த உருவங்களை செய்கிறார்களோ மறுமையில் அவர்களை வேதனை செய்யப்படும். நீங்கள் படைத்தவற்றுக்கு உயிர் கொடுங்கள் என்று அவர்களிடம் கூறப்படும்.'' (ஸஹீஹுல் புகாரி)

அபூஸுர்ஆ இப்னு அம்ர் இப்னு ஜரீர் رحمه الله அவர்கள் கூறுகிறார்கள்:

நான் அபூஹுரைரா رضي الله عنه அவர்களுடன் மதீனாவில் ஒரு வீட்டினுள் நுழைந்தேன். அதன் மேல் தளத்தில் உருவப்படங்களை வரைபவர் ஒருவர் உருவங்களை வரைந்து கொண்டிருந்தார். அப்போது அபூஹுரைரா رضي الله عنه அவர்கள் கூறினார்கள்: ''என் படைப்பைப் போன்று படைக்க எண்ணுபவனை விட அக்கிரமக்காரன் வேறு யார் இருக்க முடியும்? அவர்கள் ஒரு தானிய விதையையாவது படைத்துக் காட்டட்டும். ஒரு சிறிய எறும்பையாவது படைத்துக் காட்டட்டும் என்று அல்லாஹ் கூறுவதாக

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் சொல்ல நான் செவியுற்றேன்." (ஸஹீஹுல் புகாரி)

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் உருவம் வரைபவர்களைச் சபித்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)

வீடு, கூடாரம், தங்கும் அறை, வியாபாரத் தலங்கள் என எந்த இடமாக இருந்தாலும் அங்கு உருவப்படங்களை வைப்பது கூடாது.

உருவப்படங்கள் தலை துண்டிக்கப்பட்டிருந்தாலோ, கால் மிதி போன்றவற்றில் இருந்தாலோ குற்றமில்லை.

உருவங்களை வரைவது இணைவைப்பவர்களின் செயல்களாகும். இந்தச் செயலை நபி நூஹ் عليه السلام அவர்களுடைய சமுதாய மக்கள் செய்தார்கள்.

ஆயிஷா رضي الله عنها அவர்கள் கூறுகிறார்கள்:

உம்மு ஹபீபா رضي الله عنها அவர்களும் உம்மு சலமா رضي الله عنها அவர்களும் அபிசீனியாவில் தாங்கள் பார்த்த உருவப்படங்கள் கொண்ட ஒரு கிறித்தவ ஆலயத்தைக் குறித்து (என்னிடம்) பேசினார்கள். மேலும், அவ்விருவரும், நபி ﷺ அவர்களிடமும் அதைப் பற்றிக் கூறினார்கள். அதற்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "(அவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்றால்) அவர்களிடையே நல்ல மனிதர் ஒருவர் வாழ்ந்து இறந்துவிடும்போது அவரது சமாதியின் மீது வணக்கஸ்தலம் ஒன்றைக் கட்டி அதில்

(அவருடைய) உருவங்களை வரைவார்கள். அவர்கள்தான் மறுமைநாளில் அல்லாஹ்விடம் மக்களிலேயே மிக மோசமானவர்கள்." (ஸஹீஹுல் புகாரி - 427)

இமாம் நவவீ ﷫ கூறுகிறார்கள்: "உயிருள்ள ஒன்றை வரைவது மிகக் கடுமையான குற்றமாகும். பெரும் பாவத்தின் வகையைச் சேர்ந்ததாகும். அது குறித்து கடுமையான எச்சரிக்கை வந்துள்ளது. கண்ணியப்படுத்துவதற்காகச் செய்யப்பட்டாலும் அல்லது கண்ணியமின்றி பயன்படுத்துவதற்காக செய்யப்பட்டாலும் குற்றம்தான். ஆடை, விரிப்பு, பணம், காசு, பாத்திரம், சுவர் என எவற்றிலும் உருவப்படங்கள் வரைவது தடுக்கப்பட்டதே ஆகும்." (ஃபத்ஹுல் பாரி)

உருவங்கள் படமாக இருந்தாலும் அல்லது சிற்பமாக இருந்தாலும் அவை தடுக்கப்பட்டவையே! அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் "உங்களில் யார் மதீனாவிற்குள் சென்று அங்குள்ள சிலைகளை உடைத்துவிட்டு, வரையப்பட்ட படங்களை அழித்துவிட்டு வருவார்?" என்று கேட்டார்கள். (முஸ்னது அஹ்மது, ஃபத்ஹுல் பாரி)

தடை செய்யப்பட்ட உருவப்படங்களை வீட்டை விட்டு அப்புறப்படுத்துவதற்கு அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் பெரிதும் முக்கியத்துவம் கொடுத்தார்கள்.

ஆயிஷா ؓ அவர்கள் கூறுகிறார்கள்: நான் உருவப்படம் உள்ள தலையணை ஒன்றை வாங்கினேன். நபி ﷺ அவர்கள் வீட்டிற்கு வந்தபோது வாசலில் இருந்தே அதைப்

பார்த்துவிட்டு உள்ளே நுழையாமல் நின்று விட்டார்கள். அவர்களது முகத்தில் வெறுப்பை அறிந்துகொண்ட நான், “அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் நான் திரும்புகிறேன். நான் என்ன குற்றம் செய்தேன்?” என்று கேட்டேன்.

அதற்கு நபி ﷺ அவர்கள், “இந்தத் தலையணை இங்கே எப்படி வந்தது?” என்று கேட்டார்கள். “அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் உட்கார்ந்து கொள்வதற்காகவும் படுத்துக் கொள்வதற்காகவும் நான்தான் இதை வாங்கினேன்” என்று கூறினேன். (இதனைக் கேட்ட) நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “இந்த உருவங்களை வரைந்தவர்கள் மறுமையில் வேதனை செய்யப்படுவார்கள். ‘நீங்கள் படைத்ததற்கு உயிர் கொடுங்கள்’ என்று அவர்களுக்குக் கூறப்படும்.” மேலும், கூறினார்கள்: “உருவங்கள் உள்ள வீடுகளில் நிச்சயமாக மலக்குகள் நுழைய மாட்டார்கள்.” (ஸஹீஹுல் புகாரி)

இது குறித்து நாம் விரிவாகப் பேசுவதற்கு காரணம், இன்றைய முஸ்லிம்கள் இக்குற்றத்தின் விபரீதத்தை அறிந்து கொள்ளாமல் தங்கள் வீடுகளில் சுவர்கள், மாடிப்படிகள், மேசைகள், அலமாரிகள், கண்ணாடிகள் என எங்கு பார்த்தாலும், தாங்கள் விரும்பும் சினிமா நடிகன், நடிகை, பாடகன், பாடகி, விளையாட்டு வீரர் மற்றும் விளையாட்டு வீராங்கனை, அரசியல் தலைவர்களின் படங்களை மாட்டி வைத்திருக்கிறார்கள். மற்றும் பலர் அசிங்கமான, ஆபாசமான விளம்பரப் படங்களை எல்லாம் மாட்டி வைத்திருக்கிறார்கள்.

காலை மாலை எல்லா நேரங்களிலும் அவை அவர்களின் பார்வையில் பட்டபடியே இருக்கின்றன. இதனால் பல அசிங்கமான சிந்தனைகள் ஏற்படுகின்றன. சீர்கேடுகளுக்கும் ஒழுங்கீனங்களுக்கும் இந்த உருவப்படங்கள் மிக முக்கியக் காரணங்களாக விளங்குகின்றன.

சிலர் இப்படி கூறுகிறார்கள்: "உருவப் படங்களைத் தவிர்க்க முடியாத அளவிற்கு இன்று நாம் தள்ளப்பட்டுள்ளோம். அன்றாடம் பயன்படுத்தும் உணவுப்பொருட்கள், புத்தகங்கள், பத்திரிக்கைகள், நாளிதழ்கள், குறிப்பேடுகள் மற்றும் பல பொருட்களில் உருவப்படங்கள் இருக்கின்றன. அவற்றிலுள்ள உருவங்களையெல்லாம் நாம் அழிப்பதில் ஈடுபட்டால் நமது நேரங்கள்தான் வீணாகும்."

இதற்கு நாம் கூறுவதாவது: "முடிந்தளவு உருவமற்ற பொருட்களை வாங்கவேண்டும். முடியாத பட்சத்தில் உருவம் உள்ளவற்றை வாங்கும்போது அட்டையில் இருப்பதை அழித்துவிட முயல வேண்டும். உணவு டின் போன்றவற்றில் அழிக்க முடியாமல் இருக்கும் உருவங்களை விட்டுவிடுவதில் இன்ஷா அல்லாஹ் குற்றம் இருக்காது. (அந்த உருவங்களின் முகங்களில் அடையாளம் தெரியாத அளவிற்கு மார்க்கர் பேனா மூலம் கிறுக்கிவிடலாம்.) காரணம், இந்தச் சோதனை பெரிதாகவும் பரவலாகவும் ஆகிவிட்டது.

சிரமம், இலகுவிற்கு வழிவகுக்கும்.

சுவர்களை அலங்கரிக்க ஆசைப்பட்டால் சில இயற்கைக் காட்சிகளைக் கொண்டு அலங்கரிக்கலாம்.

சிலர், வீடுகளை அலங்கரிப்பதற்காக குர்ஆன் வசனங்களைப் பயன்படுத்துகின்றார்கள். சுவர்களை அலங்கரிப்பதற்காக குர்ஆனை அல்லாஹ் இறக்கவில்லை என்பதை அவர்கள் விளங்கிக் கொள்ளட்டும். இன்னும் சிலர், குர்ஆன் வசனங்களை மனிதன், பறவை, மிருகங்கள் போன்ற அமைப்பில் வரைகிறார்கள். இதுவும் குர்ஆனின் கண்ணியத்திற்கு முரணானதாகும். குர்ஆன் வசனங்களைத் தொங்கவிட்டிருப்பவர்கள் அவற்றின் கருத்துகளைப் புரியவேண்டும். குறிப்பாக, குர்ஆன் வசனம் எழுதப்பட்டுள்ள அந்த இடத்திலும் பொதுவாக எல்லா இடங்களிலும் அதற்கு மாறுசெய்யாமல் நடந்துகொள்ள வேண்டும்.

---------------

# புகை பிடித்தல்[8]

புகை பிடிக்கும் பழக்கம் மார்க்கத்தில் தடுக்கப்பட்ட ஒரு குற்றம் என்பதற்கு அல்லாஹ்வின் பின்வரும் கூற்று போதுமானது.

அல்லாஹ் கூறுகிறான்:

(இத்தூதர் தம்மை நம்பிக்கை கொண்ட) அவர்களை நன்மையான காரியங்களைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களை விட்டு விலக்குவார். நல்லவற்றையே அவர்களுக்கு ஆகுமாக்கி வைப்பார். கெட்டவற்றை அவர்களுக்குத் தடுத்து விடுவார். (அல்குர்ஆன் 7:157)

இவ்வசனத்தில் அல்லாஹ் நாம் உண்ணும் குடிக்கும் பொருட்களை இரண்டு வகையாகப் பிரித்திருக்கிறான். ஒன்று, ஆகுமாக்கப்பட்ட நல்லவை. மற்றொன்று தடை

---

8. புகைப்பது பொதுவாக எல்லா நேரங்களிலும் எல்லா இடங்களிலும் தடுக்கப்பட்ட ஒரு செயல்தான். ஒருவர் அந்த பழக்கத்திற்கு அடிமையாகி இருந்தால் அவர் அந்த செயலை பிறருக்கு தெரியாமல் மறைத்தாவது செய்யவேண்டும். அப்படி இல்லாமல் பொது இடங்களில் செய்யும்போது அவர் பாவம் செய்யத் துணிந்தவர் என்பது தெரிய வருகிறது. மேலும், இவருடைய இந்த செயலில் பாவத்தின் பக்கம் பிறரை தூண்டுவதும் இருக்கிறது. புகை பழக்கத்திற்கு அடிமையான ஒருவர் வீடுகளில் வெளிப்படையாக புகைக்கும்போது அவ்வீட்டிலுள்ள சிறுவர்களும் வாலிபர்களும் அந்த பழக்கத்தை பழகிக் கொள்வார்கள். ஆகவே, தானும் கெட்டு, பிறரையும் கெடுத்த இரு குற்றங்களுக்கு இவர் ஆளாகி விடுகிறார்.

செய்யப்பட்ட தீயவை. இதைத் தவிர்த்து மூன்றாவது ஒரு வகையில்லை. எவரேனும் புகைப்பதை நல்லது என்று சொல்ல முடியுமா? அதில் இருந்து வரக்கூடிய துர்நாற்றம், அதற்காகச் செலவழிக்கப்படும் பொருட்கள், அதனால் உடலுக்கும் மூளைக்கும் விளையும் ஆபத்துகள் இவற்றையெல்லாம் சொல்லி முடிக்க முடியுமா?

நல்லவர்களின் வீடுகளில் சிகரெட்டுகளோ, ஹுக்கா போன்ற புகைப்பிடிச் சாதனங்களோ இருக்காது.

வீட்டிற்கு வருவோரில் எவரேனும் புகை பிடிப்பார்கள் என்ற அச்சம் இருப்பின் 'இங்கு புகை பிடிக்கக் கூடாது' என்ற அறிவிப்புப் பலகைகளை வைத்துத் தடுக்க முயலவேண்டும்.

---------------

# நாய் வளர்த்தல்

இன்று நம்மில் பலர் காஃபிர்களைப் போன்று வீடுகளில் நாய்களை வளர்க்கிறார்கள். பெரும் தொகை கொடுத்து அந்த நாய்களை வாங்குகிறார்கள். அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: "நாய்க்குக் கொடுக்கப்படும் கிரயம் 'ஹராம்' தடுக்கப்பட்டதாகும்."

(முஸ்னது அஹ்மது, ஸஹீஹுல் ஜாமிஃ)

நாயுடைய உணவுக்காகவும் அதைச் சுத்தமாக வைத்திருப்பதற்காகவும் பெரும் செலவுகளைச் செய்கிறார்கள். பெரும் செல்வந்தர்களும் பெரிய பதவி வகிப்பவர்களும் தங்கள் வீட்டுக்கு அடையாளமாக நாய்களை வளர்க்கிறார்கள். நாயின் எச்சில் (நஜீஸ்) அசுத்தமாகும். வீட்டில் வளர்க்கப்படும் நாய் அங்குள்ளவர்களையும் பொருட்களையும் நக்குகின்றன. "நாய் ஒரு பாத்திரத்தில் நக்கிவிட்டால் அப்பாத்திரத்தை ஏழு முறை கழுவவேண்டும். அதில் ஒரு முறை மண்ணைக் கொண்டு கழுவவேண்டும்" என்று அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள். (சுனன் அபூதாவூது)

இது மட்டுமின்றி, வீடுகளில் நாய் வளர்ப்பதால் நன்மைகளும் குறைந்து விடுகின்றன. அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: "நாயை தங்களது வீடுகளில் கட்டி வைத்திருப்பவர்களின் நற்செயல்களில் ஒவ்வொரு

நாளும் ஒரு கீராத் (-ஒரு மலையளவு) நன்மை குறைந்து விடுகிறது. ஆனால், வேட்டைக்காக வளர்க்கப்படும் நாய் அல்லது விவசாயத்திற்காக வளர்க்கப்படும் நாய் அல்லது ஆடுகளுக்காக வளர்க்கப்படும் நாய் ஆகியவற்றைத் தவிர!" (ஜாமிவுத் திர்மிதி)

இமாம் முஸ்லிம் ﷺ அவர்கள் அறிவிக்கும் ஹதீஸில் இரண்டு கீராத் அளவு நன்மை குறைந்துவிடும் என்று வந்துள்ளது.

இந்த ஹதீஸிலிருந்து, விவசாய நிலங்களைப் பாதுகாப்பது; வேட்டையாடுவது; பெரிய வீடுகள், தொழிற்சாலைகள், கால்நடைகள் ஆகியவற்றைப் பாதுகாப்பது; குற்றவாளிகளைத் துப்பறிவது; போதைப் பொருட்களைக் கண்டறிவது இன்னும் இவை போன்ற தேவைகளுக்காகப் பயன்படுத்துவது குற்றமில்லை என்று அறிய முடிகிறது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: ஜிப்ரீல் ﷺ என்னிடம் வந்து "நான் நேற்றிரவு உங்களிடம் வந்தேன். நீங்கள் இருந்த வீட்டுக்குள் நான் நுழைவதற்கு தடையாக இருந்தது ஓர் ஆணின் உருவம்தான். வீட்டில் உருவங்கள் வரையப்பட்டிருந்த திரை ஒன்றும் நாய் ஒன்றும் இருந்தது. நபியே! நீங்கள் அந்த உருவத்தின் தலையை துண்டித்து விடுங்கள். அது ஒரு மரத்தைப் போன்று ஆகிவிடும். திரையை வெட்டி பயன்படுத்தப்படும் தலையணையாக மாற்றி விடுங்கள். வீட்டை விட்டு நாயை வெளியேற்றி

விடுங்கள்” என்று கூறினார். ஜிப்ரீல் عليه السلام கூறியவாறே நபி ﷺ அவர்கள் செய்தார்கள்.

(முஸ்னது அஹ்மது, ஸஹீஹுல் ஜாமிஃ)

---------------

# வீடுகளை ஆடம்பரமாக அலங்கரித்தல்

இன்று பலர் தங்கள் வீடுகளை அலங்கரிக்கிறார்கள். உதாரணமாக, சுவர்களில் படங்கள் வரைகிறார்கள்; வண்ண வண்ண வேலைப்பாடுகள் செய்கிறார்கள். இவையும் இவை போன்ற அனைத்தும் இவ்வுலக வாழ்வின் அற்ப இன்பங்களாகும். இவற்றில் மூழ்குவது பெருமையும் பகட்டுமாகும். இப்படிப்பட்ட வீடுகளைக் காணும்போது நாம் இப்னு அப்பாஸ் ﷺ அவர்களின் கூற்றை நினைத்துக் கொள்ள வேண்டும்.

இப்னு அப்பாஸ் ﷺ கூறுகிறார்கள்: "இவ்வுலகின் இன்பங்கள் அனைத்தும் சொர்க்க (இன்ப)த்திற்கு முன், பெயர் வைத்துக் கொள்ளும் தகுதியைக்கூட பெற்றவையல்ல!"

எப்படியெல்லாம் வீடுகளை அலங்கரிக்கிறார்கள் என்று விரிவாக இங்கு நாம் கூறமுடியாது. வீடுகளை அலங்கரிப்பவர்களுக்கு அல்லாஹ்வின் இந்த வசனங்களையே நாம் நினைவூட்ட முடியும்.

அல்லாஹ் கூறுகிறான்:

(இந்நிராகரிப்பவர்களின் செல்வ செழிப்பைக் கண்டு, ஆசை கொண்ட மற்ற) மனிதர்கள் அனைவருமே (அவர்களைப் போல் நிராகரிக்கும்) ஒரே வகுப்பினராக ஆகிவிடுவார்கள்

என்று இல்லாதிருப்பின் (அல்லாஹ்வாகிய) ரஹ்மானை நிராகரிப்பவர்களின் வீட்டு முகடுகளையும் அதன்மீது அவர்கள் ஏறிச்செல்லும் படிக்கட்டுகளையும் கூட நாம் வெள்ளியினால் ஆக்கிவிடுவோம். அவர்களுடைய வீடுகளின் வாயில்களையும், அவர்கள் சாய்ந்து கொண்டிருக்கும் கட்டில்களையும்கூட (வெள்ளியினால்) ஆக்கியிருப்போம். (வெள்ளி என்ன! இவற்றைத்) தங்கத் தாலேயே (அலங்கரித்தும் விடுவோம்). ஏனென்றால், இவை அனைத்துமே இவ்வுலக வாழ்க்கையிலுள்ள (அழிந்துவிடக்கூடிய) அற்ப இன்பங்களே அன்றி வேறில்லை. உங்கள் இறைவனிடம் இருக்கும் மறுமை(யின் நிலையான இன்ப வாழ்க்கை)யோ, மிக மேலானதும் நிலையானதுமாகும். அது இறைவனுக்குப் பயந்து நடப்பவர்களுக்குத்தான் சொந்தமானது.

(அல்குர்ஆன் 43 : 33-35)

இந்த வசனத்தின் விளக்கமாவது:

அதாவது, அல்லாஹ் ஒருவருக்கு செல்வத்தைக் கொடுப்பதால் அவர் மீது அவன் அன்பு வைக்கிறான் என்று அறிவற்ற பலர் விளங்கிக் கொண்டு, செல்வத்திற்காக இறைநிராகரிப்பை தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள் என்ற நிலை இல்லையெனில் இறை நிராகரிப்பாளர்களின் வீடுகளில் இருக்கும் முகடுகள், ஏணிகள், பூட்டுகள் மற்றும் பொருட்கள் அனைத்தையும் தங்கம் வெள்ளியிலேயே அவன் ஆக்கியிருப்பான். காரணம், அவர்களுடைய

நன்மைகளுக்கு உலகத்திலேயே கூலி கொடுக்கப்பட்டு, மறுமையில் அவர்கள் நன்மை ஒன்றும் இல்லாதவர்களாக அல்லாஹ்விடம் வரவேண்டும். (தஃப்ஸீர் இப்னு கஸீர்)

ஆயிஷா ﵂ அவர்கள் அறிவிக்கிறார்கள்: அல்லாஹ்வுடைய தூதர் ﷺ அவர்கள் ஒரு போருக்குச் சென்றிருந்தார்கள். நான் குஞ்சம் உள்ள ஒரு விரிப்பைக் கொண்டு வீட்டுக் கதவை மறைத்திருந்தேன். போரில் இருந்து திரும்பிய நபி ﷺ அவர்கள் அந்த விரிப்பைப் பார்த்தார்கள். அதை அவர்கள் வெறுக்கிறார்கள் என்று நான் விளங்கிக் கொண்டேன். நபி ﷺ அவர்கள் அதை வேகமாக அதிலிருந்து இழுத்துக் கிழித்து விட்டார்கள். மேலும் கூறினார்கள்: “நிச்சயமாக அல்லாஹ் கற்களுக்கும் மணலுக்கும் ஆடை அணிவிக்கும்படி நம்மை ஏவவில்லை.” (ஸஹீஹ் முஸ்லிம்)

ஒரு முறை ஃபாத்திமா ﵂ அவர்கள் உணவு தயாரித்து விட்டு அல்லாஹ்வுடைய தூதரை அழைத்து வந்தால் நன்றாக இருக்குமே என்று அலீ ﵁ அவர்களிடம் கூறினார்கள். நபி ﷺ அவர்கள் அங்கு வந்து வீட்டுப்படியில் கையை வைத்தபோது அலங்காரமான மெல்லிய போர்வை ஒன்று தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து திரும்பிச் சென்றுவிட்டார்கள். “நீங்கள் சென்று, ‘அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் ஏன் சென்றீர்கள்’ என்று கேளுங்கள்” என அலீ ﵁ அவர்களிடம் ஃபாத்திமா ﵂ கூறினார்கள். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அலங்கரிக்கப்பட்ட வீடுகளுக்குள்

நுழைவதற்கு எனக்கு அனுமதியில்லை. (அல்லது இறைத் தூதருக்கு அனுமதியில்லை என்று கூறினார்கள்.)

(முஸ்னது அஹ்மது)

விருந்தில் தடுக்கப்பட்ட செயல்களைப் பார்த்தால் திரும்பி வந்துவிடுவாரா என்ற தலைப்பில் இமாம் புகாரி அவர்கள் தங்களது ஸஹீஹ் நூலில் ஒரு நிகழ்வைப் பதிவு செய்கிறார்கள்.

இப்னு உமர் ﵁ அவர்கள் அபூ அய்யூப் ﵁ அவர்களை வீட்டிற்கு விருந்துக்கு அழைத்தார்கள். அங்கு வந்த அபூ அய்யூப் ﵁ அவர்கள் சுவர்கள் மீது திரையிடப்பட்டிருப்பதைப் பார்த்தார்கள். இதை கவனித்த இப்னு உமர் ﵁ அவர்கள் பெண்கள் இது விஷயத்தில் எங்கள் பேச்சை மீறிவிட்டார்கள் என்று கூறினார்கள். அதற்கு அபூ அய்யூப் ﵁ கூறினார்கள்: நான் (மார்க்க விஷயத்தில்) பலர் மீது பயந்திருக்கிறேன். ஆனால் உங்கள் மீது பயந்ததில்லை. (அப்படியிருக்க நீங்களே இப்படி செய்து விட்டீர்களா என்று கூறிவிட்டு) அல்லாஹ்வின் மீது சத்தியமாக நான் உணவு எதையும் சாப்பிட மாட்டேன் என்று திரும்பி சென்று விட்டார்கள்.

முஸ்னது அஹமதில், "நீங்கள் சுவர்களுக்கு திரையிடுகிறீர்களா? என்று அபூ அய்யூப் ﵁ அவர்கள் கண்டித்ததாகவும்" அறிவிப்பு வந்துள்ளது.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறியதாக அபூ ஜுஹைஃபா ﵁ அறிவிக்கிறார்கள்: “உங்களுக்கு

இவ்வுலக வசதி அதிகமாகக் கிடைக்கும். அப்போது கஅபா, திரைகளைக் கொண்டு அலங்கரிக்கப்படுவதைப் போன்று உங்கள் வீடுகளையும் நீங்கள் அலங்கரிப்பீர்கள். அன்றைய நாளை விட இன்று நீங்கள் சிறந்தவர்கள்.”

(தப்ரானி, ஸஹீஹுல் ஜாமிஃ)

வீடுகளை வீண் விரயம் செய்து அலங்கரிப்பதுதான் தடை செய்யப்பட்டது. பயன்பாட்டுக்குரிய அவசியமான மற்றும் தேவைப்படும் பொருட்களை வாங்குவதும் அவற்றை வீட்டில் வைப்பதும், அவற்றைப் பயன்படுத்துவதும் குற்றமல்ல!

---------------

# தாருல் ஹுதா

## வெளியீடுகள்

### தமிழ் புத்தகங்கள்

1. தொழுகை முறை
2. நோன்பு
3. ஹிஜாப் - முஸ்லிம் மங்கையரின் மேன்மை
4. அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ கொள்கைகள்
5. அழைப்புப்பணி - அழைப்பாளர்
6. திருமண வாழ்த்து, காலை மாலை திக்ருகள், இஸ்திகாரா
7. ஸகாத் - வழிமுறைகள், சட்டதிட்டங்கள்
8. இறுதிப் பேருரை (முழுத் தொகுப்பு)
9. இஸ்லாமியக் கொள்கை. வினா - விடைகள்
10. தடுக்கப்பட்டவை
11. இறைநெறி கூறும் இயற்கைக் கடமைகள்
12. அல்குர்ஆன் துஆக்கள்
13. குர்ஆன் ஹதீஸ் கூறும் பிரார்த்தனை
14. நம்பிக்கையின் அடிப்படைகள்
15. இல்லங்களை அச்சுறுத்தும் அபாயங்கள்
16. இஸ்லாமிய ஒளியில் குழந்தை வளர்ப்பு
17. மூன்று அடிப்படைகள்
18. அலட்சியமாகக் கருதப்படும் ஆபத்தான குற்றங்கள்
19. தஃலீமுல் குர்ஆன் (தஜ்வீது வழிகாட்டி)
20. அத்தவ்ஹீத்
21. அன்றாடம் கடைப்பிடிக்க 1000 சுன்னத்துகள்
22. வெற்றிக்கு வழி

23. அழைப்புப் பணி கேள்வி-பதில்
24. உம்ரா வழிகாட்டி (ஆர்ட் பேப்பர் 18x12 cm)
25. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (10.5x14 cm)
26. முன்மாதிரி முஸ்லிம் குடும்பம்
27. இயற்கை மதம்
28. ஹிஸ்னுல் முஸ்லிம் (மஸ்னூன் துஆக்கள்)
29. இஸ்லாமின் இறைக்கோட்பாடு
30. மீளாப்பயணம் (ஜனாஸாவின் சட்டங்கள்)
31. இப்னு தைமிய்யா வாழ்க்கை வரலாறு
32. முன்மாதிரி முஸ்லிம்
33. ஹிஸ்னுல் முஸ்லிம் (21x14 cm)
34. ஹஜ். உம்ரா வழிகாட்டி
35. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (21x14 cm Single Colour)
36. தப்ஸீர் முதல் ஜுஸ்வு
37. முன்மாதிரி முஸ்லிம் பெண்மணி
38. அர்ரஹீக் அல்மக்தூம் (18x24 cm)
39. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (14x21 cm Full Colour)
40. இறைமார்க்கம் இறைவேதம் ஓர் அறிமுகம்
41. இஸ்லாம் நீங்கள் அறியவேண்டிய மார்க்கம்
42. சான்றோர்கள் பாடசாலை (பாகம் 1)
43. இறைவனுக்கு உருவம் கொடுக்க முடியுமா?
44. கவலைப்படாதே!
45. இயேசுவின் அழைப்பு
46. ஒரு தெய்வமா? பல தெய்வமா?
47. வஸிய்யத்தீ
48. ரஹ்மத்தான ரமழான்
49. இஸ்லாமிய சிறப்பு கல்வி வகுப்பு
50. உலக முடிவு

51. இறைத்தூதரின் தூய வரலாறு
52. அல்குர்ஆன் பாக்கியம் நிறைந்த வேதம்
53. குர்ஆன் சுன்னா ஒளியில் அத்தஹாரா - தூய்மை
54. குர்ஆன் சுன்னா ஒளியில் தொழுகை
55. தூய திருகலிமா
56. குர்ஆன் சுன்னா ஒளியில் ஸகாத்

# அல்குர்ஆன் தமிழாக்கங்கள்

1. தர்ஜமதுல் குர்ஆன் பி அல்தஃஃபில் பயான் (HB 48 gsm)
2. தர்ஜமதுல் குர்ஆன் பி அல்தஃஃபில் பயான் (HB 60 gsm)
3. புகழ்மிகு குர்ஆன் போற்றத்தகு தமிழாக்கம் (Hard Bound)
4. மகத்துவமிகு குர்ஆன் மாண்புமிகு தமிழாக்கம் (Hard Bound)
5. தெளிவுமிகு குர்ஆன் தெவிட்டாத தமிழாக்கம் (HB 28 gsm)
6. மேன்மைமிகு குர்ஆன் எளிமைமிகு தமிழாக்கம்
7. இறைவேதம் அல்குர்ஆன் தமிழாக்கம் (Soft Bound)
8. சங்கைமிகு குர்ஆன் சிறப்புமிகு தமிழாக்கம் (Zip cover)
9. சங்கைமிகு குர்ஆன் சிறப்புமிகு தமிழாக்கம் (Hard bound)
10. கண்ணியமிகு குர்ஆன் இனிமைமிகு தமிழாக்கம் (Soft Bound)
11. உயர்வுமிகு குர்ஆன் உன்னத தமிழாக்கம் (HB 28 gsm)
12. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் - பாகம் 1 (அல் பாதிஹா (01) முதல் அத் தவ்பா (9) வரை)
13. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் - பாகம் 2 (சூரா யூனுஸ் (10) முதல் அல் அன்கபூத் (29) வரை)
14. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் பாகம் 3 (சூரா அர்ரூம் (30) முதல் அந்நாஸ் (114) வரை)
15. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் (அம்ம ஜுஸ்வு)

## ENGLISH BOOKS

1. The Ideal Husband & The Ideal Wife
2. 33 Ways Developing Inner Fear
3. 40 Guidelines & Dangers That Threaten
4. Situations & Questions - Answers
5. Prohipited & Problems And Solutions
6. Aqeeda Attawheed
7. The True Message of Jesus Christ
8. Fortification of The Muslim
9. Funeral Rites In Islaam
10. Explanation of Aayat Alkursi
11. Gateway To Arabic, Starter Book, (1-5 Parts) each book
12. Search for Happiness
13. What Must Be Known About Islaam?
14. The Sunnah Out Spread Flags of...
15. The Book of Tawheed
16. The Ideal Muslim
17. Ideal Muslimah
18. Noble Quran in The English Language
19. Arraheeq Al Makhtoom
20. About Islam
21. Glourious Quran
22. Precious Invocations and Ruqyas (21x14 cm)

23. Dua and Ruqya from Quran and Sunnah (10.5x14 cm)
24. The Quran with English Meanings and Notes
25. English Meanings and Notes of The Quran

## தமிழ் இஸ்லாமிய போஸ்டர்கள்

1. நல்லுறவு மலர
2. அல்குர்ஆன் கூறும் வாழ்வியல் அறிவுரை
3. நாவைப் பேணுக
4. நீங்கள் வணங்கத் தகுதியான இறைவன் யார்?
5. அல்லாஹ் நேசிக்காத கூட்டங்கள்
6. இறுதிப் பேருரை (சிறியது)
7. மீளாப் பயணம்
8. இறுதிப் பேருரை (பெரியது)

## ENGLISH ISLAMIC POSTERS

1. Mind your Tongue
2. Journey of no Return

## ARABIC SCHOOL BOOKS

1. LKG Text Book
2. LKG Work Book
3. UKG Text Book
4. UKG Work Book
5. 1st Text Book
6. 1st Work Book

7. Nafahaatul Eeman

8. Nafahaatul Eeman Work Book

9. 2nd Std Text Book

10. Hand Writing Ruk'a

11. Hand Writing Naskh New

12. Colouring Book

13. Alif Baa Taa

------------------